உ

ஸ்ரீ கிருஷ்ணாய பரப் பிரஹ்மணே நம:

திரு வர் மாத்தூர்,

ஸ்ரீ திரு வேங்கட நாதர் இயற்றிய

# கீதா சாரத் தாலாட்டு.

இதற்கு,

திருவாரூர், மடப்புரம், தக்ஷிணா மூர்த்தி மடாதிபதி,
மதுரை, ஸ்ரீ சிவானந்த சுவாமிகளவர்கள்
இயற்றிய உரை,

இவை இரண்டும்



திருப்பூவணம்,
ஸ்ரீ காசிகானந்த ஞானாச்சார்ய ஸ்வாமிகள்
அவர்களால் பரிசோதிக்கப் பெற்று,

திருவாரூர், மடப்புரம், ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தி சுவாமிகள்
மடாதிபதி, V. R. S. ஷண்முகானந்த சுவாமிகளால்

மதுரை, V. சுப்புராயலு நாயுடு பிரஸில்
பதிப்பிக்கப்பட்டது.

1965. [விலை 62 பைசா

7504
R65(KOV)

நற்கோத்து பெட்டி ஒன்றக்கு விலை 50 ஐம்பது ரூபாய்.

தனிப் புத்தகம்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | பஞ்சதசி கவி 796. | 0 | 63 | 2 | பகவற் கீதை கவி 545. | 1 | 25 |
| 3 | பிரஹ்ம கீதை கவி 547. | 0 | 38 | 4 | ஈசுவர கீதை கவி 338. | 0 | 25 |
| 5 | பக்தி சதக ஸ்தோத்திரம், ஸ்தோத்திரப் பிரகாச உரை. | | | | | 0 | 19 |
| 6 | கைவல்ய நவநீதம் கவி 288. 0—56. 7. திரு எம்பாவை, திருப்பள்ளி எழுச்சி பத உரை | | | | | 0 | 25 |

(2—51)

பெட்டியில் உள்ள 41 வால்யும், தனிப் புத்தகம் 7ம் ஆக 48 வால்யும் விலக்கு தனித் தனியாகவும் கிடைக்கும்.

---

திரு வாரூர், மடப் புரம், தக்ஷிண மூர்த்தி மடாதிபதி,
மதுரை, ஸ்ரீ சிவாநந்த சுவாமிகள் இயற்றியன.

| | | |
|---|---|---|
| 1 | காயா ஜீவ வாதக் கட்டளை, ஸ்ரீ சிவாநந்த சுவாமிகள் வியாக்யாநம். | ரூ. 3—50 |
| 2 | கீதா சாரத் தாலாட்டு, ஸ்ரீ சிவாநந்த சுவாமிகள் உரை. | ரூ. 0—62 |
| 3 | சசிவர்ண போதம் 41 பாட்டு வரை ஆந்தரார்த்தப் பிரதீபிகை உரை ஸ்ரீ சிவாநந்த சுவாமிகள் | அச்சில் |
| 4 | வேதாந்த சூடாமணி ஆந்தரார்த்த போதினி உரை ஸ்ரீ சிவாநந்த சுவாமிகள். | அச்சில் |
| 5 | திரு வாரூர், மடப் புரம் குரு தக்ஷிண மூர்த்தி சுவாமிகள் சரிதம் கவி. | அச்சில் |
| 6 | திரு வாரூர், மடப் புரம் குரு தக்ஷிண மூர்த்தி சுவாமிகள் சரித்திரம் வசநம். | அச்சில் |
| 7 | ஷை தக்ஷிண மூர்த்தி சுவாமிகள் சரிதம், இங்கிலீஷ் வசநம். ஷை ஹிந்தி வசநம். | அச்சில் |

2331
214-5

ஸ்ரீ-கிருஷ்ணயபரப்பிரம்மணே நம:

திரு வேங்கட நாத ரருளிச் செய்த

# கீதா சாரத் தாலாட்டு

KOVILOOR MADALAYAM
KOVILOOR-630 307
(NEAR) KARAIKUDI
(PHONE: ...488846)

மூலமும்

மடப் புரம், ஆ. செ. துரைச் சாமி நாயக்கர்

அவர்கள் வேண்டுகோளின்படி

7504
R65(KOV)

பிரம்மாநந்த சாகர சொருப ராகிய

ஸ்ரீ கோவி லூர்ச் சிதம்பர சுவாமிகள்

மாணுக்க ராயும்,

திரு வாரூரைச் சேர்ந்த வன்மீக புரத்தி லெழுந் தருளிய

ஸ்ரீ குரு தக்ஷிண மூர்த்தி சுவாமிகள்

ஆதீனத்திற் குரியவராயு முள்ள,

மதுரை

## சிவா நந்த சுவாமிக ளியற்றிய

## உரையும்.

---

திரு வாரூர் மடப்புரம் தக்ஷிண மூர்த்தி சுவாமிகள்
மடாதிபதி ஸ்ரீ V. R. S. ஷண் முகாநந்த சுவாமிகளால்
மதுரை, V. சுப்புராயலு நாயுடு பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.

விலை பைசா 50.] 1965. [Copyright Reserved.

214-5



## உரைச் சிறப்புப் பாயிரம்.

இஃது

தேவி கோட்டை

**வீ. ர. லெ சிந்நயச் செட்டியாரால்**

இயற்றப்பட்டது.

---

போதார் பொழில்சூழ் வன்மீக புரத்திற் பொலியுஞ் [செங்கழுநீர்
மாதார்த் தட்சி ணுமூர்த்தி மடத்துக் கதிபன் றுரியநிலை
மீதாய்த் திகழுஞ் சிவாநந்த மேலோன் விரித்த மெய்யுரை [யாற்
கீதா சாரத் தாலாட்டுக் கிளர்ந்தோங் கிய்து நீணிலத்தே.

---

இஃது

## உரைப் பாயிரம்.

### தெய்வங்களின் வணக்கம்

ஐங்கர னறுமுக னருமிகு மம்பிகை
சங்கர னயனரி தமைவணங் குதுமே.

### குரு வணக்கம்

---

நிதம்பர மாயொளிர் நின்மல மோநச்
சிதம்பர குருபதந் திநம்பணி குதுமே.

### அடியார்கள் வணக்கம்.

---

சிதம்பர தேசிகன் செய்யபொற் கமலப்
பதம்பர மௌநிலை பவர்பதம் பணிகுதும்.



## அவை யடக்கமும், உரையின் பிரயோசநமும்.

---

நங்குரு நாத னந்தம் நாவினின் றியற்று வித்த
பங்கமில் கீதா சாரப் பாக்கட முரையுட் கொள்வோர்
சங்கர னயன் மால் தேவர் சகலரும் புகழ்வ தான
துங்கமார் சீவன் முத்திச் சுகமநு பவிப்பர் தாமே.

உ

சிவ மயம்.

# கீதா சாரத் தாலாட்டு.

## அவதாரிகை.

வட மொழி தென் மொழியில் வல்லமை யுள்ள திரு வேங்கட நாத ரென்னு நூ லாசிரியர், தமது பெருங் கருணையினுற் கூறப் புகுந்த விந் நூ லானது, நிர்விக்கின மாய் நிறைவேறிப் பெரியோர்களா லங்கீகரிக்கப்பட்டுப் படிப் பவர், கேட்பவர்கட் கேகாக்கிர முதலியனவோ டத்துவித ஞாநம் பாலித்துப் பாரம்பரியமாய் வழங்கி வரும் பொருட் டுத், தமது வழிபடு கடவு ளாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானை ஞாந சூரிய னுகத் துதிக்கின்றுர்.

ஐவகைப் பொருளு நான்கு கரணமுங் குணங்கண் [மூன்றுஞ்,
செய்வினை யிரண்டு மொன்றி யாவருந் திகைப்ப நின்ற,
பொய்யிரு ளகல ஞாநப் பொருட்கதிர் விரித்த புத்தேள்,
கைவளை யாழிச் செங்கட் கண்ணனைக் கருத்துள் [வைப்பாம்.

## இதன் பொருள்

*ஐ வகை - ஐந்து பிரி வாகிய, பொருளும்- பொருட்களையும், நான்கு கரணமும் (சங்கற்ப-நிச்சய-அவதாந-அபிமாந மென்னுந் தொழில்களை யுடைய) அந்தக் கரண சதுட்டயத்தையும், குணங்கள் மூன்றும் - (பிரகாசம்-பிரவிருத்தி மோகமே சொருபமா யுள்ள-சாத்வீக-இராஜத-தாமத மென்னும்) திரி குணங்களையும், செய் - (மந வாக்குக் காயங்களாற்) செய்யப்பட்ட, வினை யிரண்டும் (புண்ணிய பாவ மாகிய) உபய கன்மங்களையும், ஒன்றி - (யானென தென்ப தாகப்) பொருந்தி, யாவரும் - சருவத்திரர்களும், திகைப்ப - மயங்குதற்குக் காரண மாக, நின்ற- (மறைப்பே சொருப மாக) நிற்கின்ற, பொய் இருள்- மித்தை யாகிய அஞ்ஞாநாந்தகார மானது, அகல-(பரிபக்குவர்கட்கு) நிவிர்த்தியாகும்படி, ஞாநப் பொருள் கதிர்- ஞாநார்த்தங்க ளாகிய கிரணங்களை, விரித்த-பரப்பிய. புத்தேள்-தெய்வமா யுள்ள, வளை- (பாஞ்சசந்நிய மென்னுஞ்) சங்கையும், ஆழி - (சுதரிசந மென்னுஞ்) சக்கரத்தையுந் தரித்த, கை - திருக் கரங்களையும், செம் கண் - சிவந்த (தாமரை மலர் போன்ற) நேத்திரங்களை யுமுடைய, கண்ணனை-ஞாந திரு கர னென்னும்)ஸ்ரீ கிருஷ்ண பகவானை, கருத்துள் வைப்பாம்-இருதயத்தினுள் (அபேத மாக) வைத்துத் தியாநிப்பாம் - (என்ற வாறு.)

பொருளும், மூன்றும். இரண்டும், என்பவைகளில், இரண்ட னுருபும். கரணமும், என்றதில், சாரியையும்- இரண்ட னுருபும் தொக்கன.



*சத்த ஸ்பரிசாதி விஷயங்கள் (1) சுரோத்திராதி ஞாநேந்திரியங்கள், (2) வியாநாதி வாயுக்கள், (3) வாக்காதி கன்மேந்திரியங்கள், (4) சருமாதி யாறு தத்துவ மாகிய தூல சரீரம், (5) இவ் வைந்து பிரிவாகிய பொருட்களையே தொகுத்து ஐ வகைப் பொருளு மென்றுர்.

---

### ஆக்கியோன் பெயரும், மூத னூற் பெயரும், நூற் பெயருங் கூறல்.

---

வெண்பா.

மாதையர்கோன் வேதநவில் வாய்வேங் கடநாதன்,
காதையுறப் பார்த்தனுக்குக் கண்ணனருள் - கீதைக்,
கருத்துயர்தா லாட்டாகக் கட்டுரைத்தான் யாருங்,
கருத்துயர்தீர்ந் தெய்தக்க தி.

(இ-ள்) மாதையர்-மாதைப் பதியி லுள்ளவர்களுக்கு, கோன்- அரச னுகிய, *வேத நவில்-வேதாத்தியயநம் பண்ணுகின்ற, வாய்- வாக்கினை யுடைய, வேங்கட நாதன்-திருவேங்கட நாத னென்னும் பிராமண சிரேஷ்டரானவர், காதை யுற- சொற் சுவை பொருந்த, பார்த்தனுக்கு-அருச்சுநனுக்கு, கண்ணன் - ஸ்ரீ கிருஷ்ண பகவான், அருள்- அநுக்கிரகம் பண்ணிய, கீதை - (பகவற்) கீதையினது, கருத்து-தாற்பரிய மாகிய (ஞாநார்த்தங்களை), உயர் † தாலாட் டாக-மேன்மை பொருந்திய தாலாட்டுப் பிரபந்தமாக, ‡யாரும்-சருவத்திரர்களும், கருத் துயர் தீர்ந்து-ஜன்ம துக்க மானது நீங்கப்பெற்று, கதி-மோக்ஷத்தை, எய்த - அடையும் பொருட்டு, கட்டுரைத்தான் - உறுதி மொழி யாகக் கூறினுர் (எ-று).

*வேத நவில் வாய் வேங்கட நாத னென்றமையின், வேதாத்தியநஞ் செய்குதல் பிராமணர்கட்கே மிகவு முரித் தென்பது பற்றி, யுரையிற் பிராமண னென விரித் தெழுதி னும்.

†பதி னெட்டத்தியாயங்களாற் கன்மம், பத்தி-ஞாநார்த்தங்களை மிச்சிர மாய்க் கூறி யுள்ள பகவற் கீதை யின்கண் - கரும்பி னின்று மிரசத்தைக் கிரகித்தல் போல அந்தரங்க மான ஞாநார்த்தங்களைச் சங்கரகித்துத் தாலாட் டுப் பிரபந்த மாகக் கூறினமையின், இது கீதா சாரத் தா லாட் டெனும் பெய ருடைத் தாயிற்று

‡தீவிரதர அதிகாரிகட்குப் பயன்படுதலு மன்றி, மந் தாதிகாரிகட்கு மினிது விளங்கிப் பயன்படு மென்பது தோன்ற-யாரு மென்ருர்.

மாதைப் பதி யென்பதைச் சிலர், மாதேவிப் பட்டண மென்றும், சிலர் திரு வாமாத்தூ ரென்றும் கூறுவார்கள்.

---

# நூல்.

---

சீராரும் பரமார்த்த தெரிசநத்தை யருள்செய்யப்,
பேராருந் தேசிகராய்ப் பெருமானே வந்தவரோ. (1)

(இ-ள்) பெருமானே - (ஸ்ரீ பகவா ஞகிய எமது) பிரானே, சீர்-ஆரும் (சச்சிதாநந்த கந மாகிய) சிறப்பினைப் பொருந்திய, பரமார்த்த தெரிசநத்தை-எதார்த்தமா யுள்ள ஆத்ம தரிசநத்தை, அருள் செய்ய- (அருச்சுநனுக்கு) அநுக் கிரகஞ் செய்யும் பொருட்டு, பேர் ஆரும் - பெருமை நிறைந் துள்ள, தேசிக ராய்-ஞாநாசாரிய ராக, வந்தவரோ-எழுந்தருளி வந்தவரோ நீர், (எ-று).



பெருமானே யென்பது விளி.

வந்தவரோ வெனச் செய்யுளி னீற்றி லுள்ள ஓகாரம் வியப்புப் பொருளது. நன் னூல்-இடை யியலில்-இரண்டாம் சூத்திரம் - இன்னன வென்றதனுல் - பின் வருவனவு மிவ் வாறே.

சிருட்டி யாதி பஞ்சகிருத்தியங்களில், சிருட்டி, திதி, சம்ஹாரந், திரோபவ மென்னு நான்கினுலுஞ் சம்சாரத் துக்க நிவிர்த்தியாகாது, அநுக்கிரக மொன்றினுன் மாத்திரம் நிவிர்த்தியாகின்றமையா லநுக்கிரக மொன்றுமே பெருமை யுடைத் தென்பது கூருமே யமையும் - அவ் வநுக்கிரகத் தைக் குரு மூர்த்த மாகவே யிருந்து செய்வது மரபா யிருத் தலின், குரு மூர்த்தியே பெருமை யுடையா ரென்பது தோன்றப், பே ராருந் தேசிகரா யென்ருர்.

திருத்தேரிற் சாரதியாய்ச் சேர்ந்திருந்துங் கீதையினு,
லருச்சுநற்கு மெய்ஞ்ஞாந மனைத்துமுரை செய்த
[வரோ. (2)

(இ-ள்) திருத் தேரில் - சிறப்புப் பொருந்திய இரதத் தில், சாரதி யாய்-தேர்ப் பாக ராய், சேர்ந்திருந்தும்-பொருந் தியிருந்தும், கீதையினுல்-(இசை பொருந்திய வுபதேச ரூப மான தமது) வாக்கியத்தால், அருச்சுநற்கு -பார்த்தனுக்கு, மெய் ஞாநம்—தத்துவ ஞாநம், அனைத்தும் - முழுவதும், உரை செய்தவரோ-அநுக்கிரகஞ் செய்தருளியவரோ நீர். (எ-று)

அருச்சுநனுக்குக் காண்டவ தகந சமயத்து அக்கினி பகவானுற் கொடுக்கப்பட்டு நவ ரத்திந கசித மாகிய சுவர்

ணத் தூபி வைத்துச் சுவேதவாம் புரவிகள் பூட்டி யநுமத் துவஜம் நாட்டப் பெற்ற அழியாத இரத மானதால்-திருத் தேரென்றார்-இன்னும் சச்சிதாநந்த சொரூப மாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானே ஞானாசாரிய மூர்த்த மாக எழுந் தருளி யிருந்து சத்திய விரத னுகிய அருச்சுநனுக்குப் பிர மாங்மைக்கிய ஞானோபதேசஞ் செய்தற்கு ஸ்தாந மாக அமைதலின், திருத்தேரெனக் கூறினு ரெனினும் அமையும்.

சேர்ந்திருந்து மென-இழிவு சிறப்பும்மை கொடுத்துக் கூறியது யாதினு லெனின், ஆசாரிய சிஷ்யக் கிரமம் பிறழ்ந் தமையி னென்க. அஃதா மாறு-தலை யுரோமத்தி னெருப்புப் பற்றப் பெற்றவனும், சில தின முபவாச மிருந்தவனும், யா தொன்றையும் விரும்பாது ஜலம், அன்ன. மிவைகளையே அதி விரை வாக விரும்பித் தேடிச் செல்வது போல, ஜநந மரண சம்சாரத்தால் வருந்துபவன், அதனை நிவிர்த்திக்கத் தக்க ஞானாசாரிய ரெங்குள ரெனத் தேடி வந் தஷ்டாங்க பஞ்சாங்க நமஸ்கார பூர்வக மாக வணங்கி யெழுந்து வாக் கிறைற், பல வாறு துதித்துத் தனக்கு கிருபை வரு மளவும் ஆத்த முதலிய பணிகளைச் செய்து வருகிற, சாதந சதுட் டய முள்ள சீட னதி தீவிர பக்குவ னுக இருப்பின் ஏகாந்த ஸ்தாநத்தில் அச் சீடன் மிகுந்த பய பத்தி விநயத்தோடு கை கட்டி வாய் புதைத்துத் தாழ்ந்த ஸ்தாநத்தி னின்று கேட்பத் தா னுயர்ந்த வாசநத்தின்கண் ணிருந்து ஞானோப தேசஞ் செய்வது மரபா யிருக்க, அங்ஙன மின்றி, அருச்சுந னிருக்கு மிடத்திற்குத் தான் வந்து, அவனது ஏவற் றெழில் செய்யுஞ் சாரதி யாய்ப் பலருங் கூடிய யுத்த களமத்தியிற் சென் றுள இரதத்திற், பாச மநத்தின னுன-அருச்சுநன் உந்நத ஸ்தாநத் திருந்து கேட்பத், தான் தாழ்ந்த ஸ்தாநத்தி லொரு பத மடித் தொரு பதம் பொற் றேர் மிதித் தொரு



கையிற் கசை குசை பிடித் தொரு கையிற் சின் முத்திரை கொண் டிருந் துபதேசித்தமையால், 'சேர்ந்திருந்தும்' என அவ் வும்மை புணர்த்தா ரென் றுணர்க.

மர பென்பது, தொன் று தொட்டு வழங்கு முறைமை.

பரோக்ஷ ஞானம்-அபரோக்ஷ ஞாந மென ஞாந மிரண் டாம், அவற்றுள், அபரோக்ஷ ஞாந மானது-அதிடாபரோக்ஷ ஞாந மெனவும்-திடாபரோக்ஷ ஞாந மெனவு மிரு வகைப் படு, மிவை முழுது முபதேசித்தா ரென்பது தோன்ற, 'மெய்ஞ் ஞாந மனைத்து' மென்றார்.

செஞ்சமரிற் பந்துஜநஞ் சேதமுறு மென் றிரங்கி,
யஞ்சியபார்த் தன்பயமாங் ககற்றவரு ளானேக்கி. (3)

(இ-ள்) செஞ் சமரில்-செவ்வி தாகிய யுத்தத்தில், பந்து ஜநம்-உறவினர்க ளாகிய யாவர்களும், சேத முறு மென் றிரங்கி - நாச மடைவார்க ளென் றிரக்க முற்று, அஞ்சிய பார்த்தன்-பயந் துள்ள அருச்சுநனது, பயம்-பீதியை: ஆங்கு-அந்த யுத்த கள மத்தியிற் றுனே, அகற்ற-நிவிர்த்தி செய்தற்கு, அருளால்-கிருபையோடு, நோக்கி-பார்த்து, (எ—று).

பாண்டவர்கள் செய்யுஞ் சமர், தர்ம சாஸ்திரத்தை யநுசரித்த தாகலின், 'செஞ் சம' ரென்றார்.

நம் குரு வாகிய துரோணர், கிருபர் முதலியவர்களும், நம் குலத்தி லுதித்த வீட்டுமர் துரியோதநாதியரு மிவர்கட் குப் பல மாக வந்த சுசநப் பரசநர்க ளாகிய மற்றைத் தேசத் தரசர்களும், தங்கள் தங்களுக் குரிய சுக போகங்களை யிழந் திந்த யுத்த களத்தி னம்மால் மரண மடைவார்களே-மரண மடைந்தா லிவர்களா லிரட்சிக்கப்பட் டுள்ள யாவர் களுந் துன்ப முறுவது மன்றி, யிவர்களாற் செய்யப்பட்டு

வருகிற குல தருமங்களும் நாச மடையும், அவை நாச மடையவே, குலங்கண் முழுது மதன்மத்திற் பிரவிர்த்திக்கும், அதனால், ஸ்திரிகள் நெறி தவறுவார்கள், அதனால், வர்ண சங்கர மாகும், அதனா லவர்கள் நரக மடைவது மல்லாம, லவர்களின் பிதிர் கணங்களும் பிண்டோதகங்களாற் செய்யப்படும் சிராத்த தருப்பணாதிகளா லுண்டாகும் பலனை யிழந்து துன்ப முறுவார்கள். இவைக ளனைத்திற்கு நாமே காரண மாதலின், நம்மைக் குல க்ஷய கிருத தோடம் வந் தடைந்து நரகில் லமிழ்த்து மென் றச்ச முற்ற வருச்சுன னென்பார், 'அஞ்சிய பார்த்த' னென்றார்.

அருச்சுனன் மோகத்தா லடைந் துள்ள பயம் நீங்கி யாத்ம ஞான பர னாய்ச் சுதர்மங்களைச் செய்து வரு நிமித்தந் தீக்ஷாக் கிரம மாக அருச்சுனன்மீது பகவான் பூரண திருஷ்டி வைத்தமை தோன்ற, 'நோக்கி' யென்றார்.

பகவான் தனக் கேதேனு மோர் பிரதி யுபகாரங்களை யபேக்ஷியாம னோக்கினா ரென்பது விளங்க, 'அருளால் நோக்கி' யென்றார். 3

சுற்றமறிற் சோகமெனச் சொல்லினைகூற் றறிந்தவன்
[போற்,
கற்றுணர்ந்த பேரதனாற் கலங்கார்கா ணென்றவரோ.

(இ-ள்) சுற்ற மறில்-பந்து வார்க்கங்க ளாச மடையுமானால், சோக மென-துக்கம் (வந்து பொருந்தும்) என்று, சற் றறிந்தவன் போல்-கிஞ்சித்துச் சாஸ்திரந் தெரிந்தவன் போல, சொல்லினை-கூறினாய், கற்று (கற்க வேண்டிய சாஸ்திரங்களைக்) கற்று. உணர்ந்த பேர்-(அறிய வேண்டியவைகளை) யறிந்த மகான்கள், அதனால், பந்து வர்க்கங்கட்கு



நேரிடுங் கெதியினால், கலங்கார்-கலக்க மடையார்கள். காணென்றவரோ- (அதனை நீ) அறிவாயாக வென்று கூறி யருளியவரோ நீர். (எ—று)

தன்னுடைய தேகாதிகட்கு நேரிடுங் கெடுதிகள் பற்றியே தனக் கொரு கெடுதியும் வாரா தென்பது சுருதி யுக்தி யநுபவங்களுக் கொத்த துணிபா யிருக்க, அந்நியர் தேகாதிகட்கு நேரிடுங் கெடுதிகள் பற்றித், தனக்குங் கெடுதிகள் நேரிடு மென்றும், மாயா காரியங்க ளாகிய தேகாதிகட்கும், அறிவு சொருப மாகிய ஆத்மாவிற்கு மெதார்த்தத்தில், யாதொரு சம்பந்தமு மின் றென்றும், க்ஷத்திரியர்கட்குத் துட்ட நிக்கிரகஞ், சபதங் காத்தன், முதலிய சுதர்மங்களைக் கைவிடுதல் பாவ மெனவும், அருச்சுனன் மோகத்தா லற்பமேனு மறியாமல், துட்டர்க ளாகிய- துரியோதனாதியரைக் கொல்வது பாவ மெனவும், அப் பாவத்தாற் றுன்பம் வரு மெனவுங் கூறினமையாற், சற்று மறியாதவ னென்பது தோன்றச், 'சற் றறிந்தவன் போ' லென்றார்.

ஓ ரவத்தை மற்றோ ரவத்தையி னிலை பெறாது கெடுதலை யுறுகின்றமையின், அவதாத் திரயப் பிரபஞ்சங்க ளனைத்தும் எந்த வேதுக்களினானு நிலைபெறா தழியத் தக்கன வெனவும், சுத்திகா ரசிதங் கானற் சலம் போல் மித்தை யெனவும், ஆத்மா அவத்தாத் திரயங்க ளொன்றி லொன்று நிலைபெறாது கெடுதலை யுறினும், தான் கெடுதலுறும லவைகளைச் சாட்சி மாத்திர மாக விகார மின்றி யறிந்து கொண்டிருத்தலின், எந்தக் காலத்தினும், எந்த வேதுக்களினானு, மழிவை யுறாது நித்தியமா யிருக்கத் தக்க சத்தியப் பொரு ளெனவும். சுருதி-யுத்தி யநுபவங்களா லறிந்த பெரியோர்கள் தேகாதிப் பிரபஞ்சங்கட்கு நேரிடுங் கெடுதிக ளோக்கி கலக்க முறார்க ளானமையின், 'கற் றுணர்ந்த பே ரதனாற் கலங்கார்கா' ணென்றார். 4

கலங்காரோ விறப்புவரிற் கற்றுணர்ந்த பேரேனு
மலங்காம ஞனிருக்கும் வகையுரையு மெனவினவ. (5)

(இ-ள்) இறப்பு வரில்-மரணம் வந்த காலத்து, கற்று-(கற்க வேண்டியவைகளைக்) கற்று, உணர்ந்த பேரனும், (அறிய வேண்டியவைகளை) யறிந்த மகான்க ளாயினும், கலங்காரோ-கலக்க முறுர்களோ- (கலக்க முறுதிருப்பார்க ளாகி லவர்களைப் போல) நான்-யானும், மலங்காமல்-மயக்க முறுமல், இருக்கும் வகை-இருக்கத் தக்கதாகிய வுபாயங்களை, உரையு மென வினவ-(அடியேனுக்) கநுக்கிரகம் பண்ணு மென் (றருச்சுநன்) கேட்க. (எ—று)

'நான்' என்பதில், இறந்தது தழுவிய எச்ச வும்மை விகாரத்தாற் றெுக்கது.

5

நீயுநா னும்புவிமே னிருப்பர்களு மெய்புணர்வா,
லாயுங்காற் பிறந்திறப்ப தார்க்குமிலை யென்றவரோ.

(இ—ள்) நீயும்-(அருச்சுந னுகிய) நீயும், நானும்-(பகவா னுகிய) யானும், புவி மே னிருபர்களும் - பூமியின் கண் ணுள்ள அரசர்களு மாகிய, ஆர்க்கும்-எவர்களுக்கும், மெய் யுணர்வால் – உண்மை ஞாநத்தால், ஆயுங்கால—விசாரிக்கு மிடத்து, பிறந் திறப்பது-ஜநித்து மரிப்பது, இலை யென்றவரோ-இல்லை யென்று கூறியருளியவரோ நீர், (எ—று).

உம்மை நான்கில், ஈற்றி லுள்ளது முற் றும்மை, ஏனைய எண் ணும்மை யாம்.

6

ஈங்கெவர்கும் பிறந்திறப்ப தில்லையென்றீ ரிவ்வுலகி,
னீங்குபவம் யார்க்கிதனை நிச்சயமாய் சொல்லுமென.



(இ—ள்) ஈங்கு-இவ் விடத்தில்; எவர்க்கும்-சருவத் திரர்களுக்கும்; பிறந் திறப்ப தில்லை யென்றீர்-ஜநித்து மரிப்ப தின் றென்று கூறினீர்; இவ் வுலகில்-இவ் வுலகத் தின்கண்ணே: நீங்கு பவம்-மரித்தல் ஜநித்த லானவை; யார்க்கு-எவர்களுக் குள்ளன; இதனை-இவ் வுண்மையை; நிச்ய மாய் சொல்லு மென—உறுதி யாகச் சொல்லு மென் றருச்சுநன் கேட்க, (எ—று)

ஈங்கு-சுட்டு நீண்டு வந்தது செய்யு ளாதலின், நீங்குதல், என்னுந் தொழிற் பெயர், இங்கே-நீங்கு-என முதனிலை மாத்திரை யாய் நின்றது.

7

இத்தரையிற் பிறந்திறப்ப தெடுத்தவுடற் கடுத்த பொறி
நித்தியமா கியவாந்மா நின்சொருப மென்றவரோ.

(இ—ள்) இத் தரையில்-இப் பூமியின்கண், பிறந் திறப்பது-ஜநித்து மரிப்பது, எடுத்த வுடற்கு-கருமத்துக் கேது வாக வெடுத்துள்ள சரீரத்துக்கு, அடுத்த பொறி–பொருந்திய விதி யாம். நித்திய மாகிய-(ஜநித்தன் மரித்த லின்றி) நித்தியமா யுள்ள, ஆந்மா-ஆந்மாவே, நின் சொருப மென்றவரோ–உனது சொருப மென்று கூறி யளிருய வரோ நீர். (எ—று)

ஆந்மா என்பதில், பிரிநிலை ஏகாரம் விகாரத்தாற் றெுத்தது.

பிராகபாவம், பிரத்தொம்சாபாவம், அந்நியோந்நியாபாவம்-அத்தியந்தாபாவ மென்னு நான் கபாவமு மின்றிச் சதோதயமா யிருப்ப தெதுவோ, அது நித்தியம்-நித்தியமா யுள்ள ஆந்மாவே தா னெனும் விசார மறிய விரும்பில்,

எமது கருணைக் கட லென்னும் பிரமாநந்த சாகர சொரூப ராகிய கோவிலூர்ச் சிதம்பர சுவாமிகள் செய் தருளிய இலக்கணவிருத்தியிற் காண்க. 8

அங்கமுயி ரிந்தியநா னன்றிவே றெனைக்காணே,
னிங்கியான் வேறுண்டே லெனக்கறியப் புகலுமென.

(இ—ள்) அங்கம்—சரீரமும், உயிர்—பிராணனும், இந்தியம்—இந்திரியங்களும், நா னன்றி—யா னென் றறிந் துளனே யல்லாமல், வே று—இவைகளுக் கந்நிய மாக, எனைக் காணேன்—எனது சொரூபத்தைக் கண்டிலேன், இங்கு—இச் சரீரங்களி னிட மாக, யான் வே றுண்டேல்—எனது சொரூப மிவைகட் கந்நிய மாக விருக்குமேயாகில், எனக் கறியப் புக லு மென—அடியேனுக்குத் தெரிந்து கொள்ளும்படி யநுக்கிரகஞ் செய்தருள வேண்டு மென் றருச்சுநன் கேட்க, (எ—று)

அங்கம்—உயிர்—பிராணன்—இந்தியம்—ஆகிய இவை களில், எண் ணும்மைகள் தொக்கன. 9

மெய்யுயிரிந் தியங்களல்லால் வேறறியே னென்ற
[வனும்,
பையவவை யாலறியப் படானுநீ யென்றவரோ.

(இ—ள்) பைய—இரகசிய மாக, மெய்—சரீரமும், உயிர்—பிராணனும், இந்தியங்க ளல்லால்—இந்திரியங்களு மாகிய (விவைகளையே நா னென் றறிந்திருக்கிறனே) யல்லாமல், வேறு—இவைகட் கந்நிய மாக, அறியே னென்ற வனும்—(எனது சொரூபத்தை) க் கண்டிலே னென்(றவை களை விஷயமா யறிந்த வறிவாயிருந்து) கூறியவனும், அவையால்—முற் சொல்லிய சரீரங்களால், அறியப்படானும்—அறிதற்கு விடயமாகாதிருப்பவனும் (ஆகிய பிரத்திய காத்ம சொரூபமே) நீ யென்றவரோ—உனது சொரூப மென் றநுக்கிரகஞ் செய்தருளியவரோ நீர், எ—று)

ஞானத்துக் கதிகார மின்றிய துரியோதனாதியர் பலரு நிறைந் துள்ள யுத்த கள மத்தியிற், சரீரத் திரய விலக்ஷண மாயு மவைகட் ககோசரமாயு மிராநின்ற பிரத்திய காத்ம சொரூபமே யுனது சொரூப மென் றுபதேசிக்கு மகாவாக் கிய மானது, அருச்சுநன் செவிக்கு மாத்திர மன்றி, மற்றை யர் செவிக்குப் புலப்படா திருத்தற்குப் பகவா னிரகசிய மாக வுபதேசித்தா ரென்பது தோன்றப் 'பைய' வென்றார்.

அவையா லறியப்படான் எனப் பகவான் கூறியிருப் பது போலவே பிரம கீதை-4-வது கேநோபநிடதார்த்த முரைத்த அத்தியாயத்தில்—''வாக்குமனங் கண்செவியான், மன்னிநின்ற பிராணனிறு-னிக்கியுள காரணத்தா னின் மலன்கோ சரிக்கவுறான்,'' எனக் கூறியிருப்பது காண்க. 10

தேகம்வே றுகிலதைச் சேர்ந்ததிவ னேதெனவே,
சோகமே விளைகருமத் தொடர்ச்சியினு றென்றவரோ.

(இ—ள்) தேகம் வேறுகில்—சரீர மாந்மாவுக் கந்நிய மானுல், அதை—அச் சரீரத்தினை, இவன்—இவ் வாந்மா வானவன், சேர்ந்தது—பொருந்தியது, ஏ தெனவே—ஏதனு லென் றருச்சுநன் கேட்க, சோகமே விளை—துக்கத்தையே விளைவிக்கும்படி யான, கருமத் தொடர்ச்சியினு லென்ற வரோ—கரும சம்பந்தத்தா லென்று கூறி யருளியவரோ நீர்,

'சோகம்' என்றதில், சாரியையும், இரண்டனுருபும்,—'விளை' என்றதில், விவ் விகுதியும்—தொக்கன.

கர்த்தாவா யிருந்து செய்யப்பட்ட விதி நிடேத மாகிய வுபய கன்மங்களுஞ் சநந மரண சம்சார துக்கங்களை விளை வித்தற்கே காரண மன்றிச், சம்சார நிவிர்த்தி யாகிய சுகத்தை விளைவித்தற்குக் காரணமாகா தென்பது தோன் றத் தேற் றேகாரங் கொடுத்துச், 'சோகமே விளை கரும' மென்றூர்.

வேதாகமங்களாற் புருடர்கட்குப் பிரவிருத்தி நிமித்தம், அல்லது, நிவிர்த்திநிமித்தம் யா தொன்று போதிக் கப்படுகிறதோ - அது கன்ம மாம் - அங்ஙனம் வேதாகமங் களாற் போதிக்கப்படாத இராகத் துவேஷ ரகித கமநாகமந சௌச முதலிய உதாசீநக் கிரியைகள் கன்ம மன்றும்-கன்ம மும்-பிரவிருத்தி நிமித்தம் போதிக்கப்படுகிறது, விகித கன்ம மெனவும், நிவிர்த்தி நிமித்தம் போதிக்கப்படுகிறது, நிஷித்த கன்ம மெனவும் இரு வகைப்படும். இவைகளில், விகித கன்மம்-நித்திய நைமித்திக - காமிய - பிராயச்சித்த மென நான்கு வித மாம், இவைகளி னிலக்கணங்களை, விசார சாகர மிரண்டாவது தரங்கத்திற் காண்க. 11

தேகமெடா முன்கருமச் செயல்வருமா றேதெனவே,
யேகமா மரமும்வித்து மெனுமுறைபோ லென்றவரோ.

(இ—ள்) தேக மெடா முன் - சரீர மெடுத்தற்கு முன்பு, கருமச் செயல் - கருமங்களைச் செய்யும்படி யான செயல்கள், வரு மாறு - வருகின்ற விதம், ஏ தெனவே- எங்ஙன மென் றருச்சுநன் கேட்க, ஏக மாம்-ஒன் றுகிய, மரமும்-(வித்துக்கு) விருக்ஷமும், வித்தும்-(விருக்ஷத்துக்கு) விதையும், எனு முறை போல், (காரணமா) மென்னும் பீஜாங்குர நியாயம் போல (அநாதியே கருமத்துக்குச் சரீர மும், சரீரத்துக்குக் கருமமுங் காரண மானமையின், கருமச் செயல் வரக்கூடும்), என்றவரோ-என்று கூறி யருளிய வரோ நீர், (எ—று).



தாஷ்டாந்தம்-எஞ்சி நின்றதால் வருவித் தாம்.

மர மென் றுளதோ, அன்றே வித்துங் காரணுத்மக மாக மரத்தினும், வித் தென் றுளதோ, அன்றே மரமுங் காரணுத்மக மாக வித்தினும், அடங்கி யொன்று யிருத்த லின்-'ஏகமா மரமும் வித்து' மென்றூர். 12

காயமுந்தா னும்பிறிதேற் கன்மமெவர் செய்ததெனத்,
தீயவுடற் கலதுகன்மச் செயறனக்கே தென்றவரோ.

(இ—ள்) காயமும்-சரீரமும், தானும் - ஆன்மா வும், பிறிதேல் - வேருகு மாறுல், கன்மம் - (விதி நிடேத மாகிய) கன்மங்களை, எவர் செய்த தென-யாவர் செய்த தென றருச்சுநன் கேட்க, கன்மச் செயல் - கன்மத்தைச் செய்யுஞ் செய லானது, தீய வுடற் கலது-கொடி தாகிய சரீரத்துக்கே யல்லாமல், தனக் கே தென்றவரோ-ஆத்மா வுக் கில்லை யென்று கூறியருளியவரோ நீர், (எ—று)

சரீரத்துக்குச் சந்தநாதித் தயில முதலிய, வுஷ்ணேதக சீதோதகங்களால் ஸ்நாநாஞ் செய்வித்தல், திரு மண், விபூதி, சந்தநாதிகள் சாற்றல், வஸ்திர பூடணுதிகளா லலங்கரித்தல், பால், தயிர் நெய் யாதிகள் சேர்ந்த சுவை யாகிய வுணவு களைக் காலந் தவரு துண்பித்த லாகிய, விவைகளோ டின்னும் வேண்டியபடி யுபகரித்து வரினு, மதற்குச் பதிலா யற்பமேனுஞ் சுகங்க டருதற் கேதுவாகாமற், றுக்கந் தரு தற்கே யேதுவா யிருத்தலாற், சரீரங் கொடிய தென்பது தோன்றத், 'தீய வுட' லென்றூர். 13

படர்கரும முடல்செய்யிற் பலமுறுவ தார்க்கெனவே,
யுடர்பலமு முடற்கேயா மறிவார்க்கே தென்றவரோ.

(இ—ள்) படர் கருமம்-(நித்திய, நைமித்திய, காமிய பிராயசித்த மென) விரிந் துள்ள கருமங்களை, உடல் செய் யில்-சரீரஞ் செய்யுமானால், பல முறுவது - (கன்ம) பலம் வந்து பொருந்துவது, யார்க் கெனவே-எவர்க் கென் றருச் சுநன் கேட்க, அடர் பலமும், (கன்மத்தால்) வந்து பொருந் திய புண்ணிய பாவ மாகிய பலன்களும், உடற்கே யாம்-சரீரத்துக்கே யாகும், அறிவார்க்கு - சாக்ஷி மாத்திர மாக அறிந்து கொண் டிராநின்ற வாந்மாவுக்கு, ஏ தென்ற வரோ-இல்லை யென்று கூறி யருளியவரோ நீர், (எ—று)

கட சராவாதிகளைச் செய்வதினால் வரு மிலாபங்கள், அவைகளைச் செய்யுங் குலாலனை யடையுமே யல்லாமல், குலாலனையுங், குலாலனாற் செய்யப்படுவ தாகிய கட சரா வாதிகளையும், விநோத மாகப் பார்த்துக் கொண்டிராநின்ற வர்களை யடையாதன போல, கன்மங்களைச் செய்வதினால் வரும் பிரயோசநங்கள், கன்மங்களைச் செய்வ தாகிய சரீரத்தை யடையுமே யல்லாமற், சரீரத்தையும், சரீரத்தாற் செய்யப்படுவ தாகிய கன்மங்களையும், சாக்ஷி மாத்திர மாக அறிந்துகொண்டிராநின்ற ஆந்மாவை யடையா வென்பது சுருதி யுத்தி யநுபவங்களுக் கொத்த துணிபாதலால், 'அறி வார்க்கு ஏ' தென்றார். 14

வெய்யவினை யுடற்கென்றான் மெய்யிங்கே விழவாந்மா,
ஐயமற நரகசொர்க்க மநுவிப்ப தேதெனவே.

(இ—ள்) வெய்ய வினை-கொடி தாகிய கன்ம பல மானது, உடற் கென்றால்-சரீரத்துக் கென்று சொல்லுவீ ரானால், மெய்-சரீர மானது, இங்கே-இப் பூமியின்கண்ணே, விழ-(மரண மாகி) வீழ்ந்த பின்னர், ஆந்மா-(சேஷித்திரா நின்ற) ஆந்மா வானது, ஐய மற-சந்தேக மின்றி, நரக



சொர்க்க மநுவிப்பது-நரக சொர்க்கங்களை யநுபவிப்ப தெனச் சிலர் கூறுவது, ஏ தெனவே-எதனா லென் றருச் சுநன் கேட்க, (எ—று)

வினை-எனக் காரியத்தைக் காரண மாக வுபசரித்தார். 15

அநுபவமே யிலையதுவீ ணாரோபி தநிகழ்த்திற்,
றநுகரணச்செயறனதாய்ச் சார்வதுபோ லென்றவரோ

(இ—ள்) அநுபவமே யிலை-ஆந்மாவுக்கு நரக சொர்க்க அநுபவமே இல்லை, அது-(ஆந்மாவுக்கு) நரக சொர்க்கா நுபவ முண் டென்பதை, நிகழ்த்தில்-சொல்லப் புகின், தநு கரணச் செயல்-தேகேந்திரியாதிகளின் செய லானது, தன தாய்-தனது செயலாக, சார்வது போல் - பொருந்துவது போல, வீணாரோபிதம் - வியர்த்த மாகிய அத்தியாசமே யாகும், என்றவரோ-என்று கூறியருளியவரோ நீர், (எ-று)

தன தபாவாதிகரணத்திற் றன தவபாசம் அத்தியாச மாம்-அல்லது, அதிட்டாந சத்தையினும் விஷம சத்தை யுடையதி னவபாசம் அத்தியாச மாம் - அல்லது, பிராந்தி ஞாநத்திற்கு விஷயமா யுள்ள மித்தையா வஸ்து, மற்றும் பிராந்தி ஞாந மிவையின் பெயர் அத்தியாச மாம்-இவ் வத் தியாசங்களின் பேதங்களை அறிய விரும்பில், ஞாந வித்தியா சாகர சொரூப ராகிய கோவி லூர்ப் பொன்னம்பல சுவாமிகள் கைவல்லிய நவநீதத்திற் கியற்றிய தத்துவார்த்த தீப மென்னு முரைப் பிரசங்கத்திற் காண்க.

அதிகரணம்-இடம், அவபாசம்-தோற்றரவு. விஷம சத்தை-சம மல்லாத சத்தை. 16

மற்றுடலின் செய்கைதன்மேல் வருமயக்க மேதெனவே
முற்றுணர்வொன் றில்லாத மோகமென்று சொன்னவ
ரோ.

(இ—ள்) மற்றுடலின் - (ஆந்மாவுக்) கந்யமாயுள்ள சரீரத்தினது, செய்கை-(பருத்த லிளைத்தல் முதலிய) செயல்கள், தன் மேல்-(ஆத்மா வாகிய) தன் பேரில், வருமயக்கமே தெனவே-(நான் பருத்தே னிளைத்தே னென வராநின்ற அத்தியாசத்திற்கு (க் காரணம்) யா தென் றருச்சுநன் கேட்க, முற்றுணர்வு-பூரண ஞாந மானது, ஒன்று-பொருந்துதல், இல்லாத-இன்றிய, மோக மென்று-அஞ் ஞாநமே (காரண) மென்று, சொன்னவரோ-கூறி யருளியவரோ நீர், (எ—று)

இங்கே, 'ஒன்று' என்பது முதல் நிலைத் தொழிற் பெயர்

17

அறிவுதே கந்தனக்கோ வாந்மாவிற் கோவெனவே,
பிறிவுசெயி லசித்துடலம் பிரமமறி வென்றவரோ.

(இ—ள்) அறிவு தேகந் தனக்கோ-சித் திலக்கணம் சரீரத்துக்கோ-ஆந்மாவிற்கோ-ஆந்மாவினுக்கோ, எனவே-என் றருச்சுநன் கேட்க, பிறிவு செயில் - (சரீர விலக்கணத்தையும், ஆந்ம விலக்கணத்தையும், வேறு)பிறித்துப்பார்க்குமிடத்து, அசித் துடலம்-சரீரஞ் சட விலக்கணத்தை யுடையது, பிரம மறி வென்றவரோ-பிரமமே சித் லக்கணத்தை யுடைய தென்று கூறி யருளியவரோ, நீர் (எ—று) 18

தேகமசித் தாகிலிந்தச் செயல்வருவ தேதெனவே,
யேகபரஞ் சோதியின்முன் னிருக்கையினு லெனறவரோ.

(இ—ள்) தேக மசித்தாகில் - சரீரஞ் சட மாயின், இந்தச் செயல் வருவது (சரீரத்துக்குக் கன்மங்களைச் செய்வதான) இச் செயல் வராநின்றது, ஏ தெனவே-யாதினுலென் றருச்சுநன் கேட்க, ஏக பரம் - ஒன் ருகவும் உயர்வாகவு முள்ள, சோதியின் முன்-சைதந்யத்தின் சந்நிதாநம்



பற்றி, இருக்கையினு லென்றவரோ-இருக்கின்றமையால் (தேகத்திற்குக் கன்மச் செயல் வரக் கூடு) மென்று கூறியருளியவரோ நீர், (எ—று) 19

இருக்கினுமசேதநத்துக் கிச்செயலுண் டோவெனவே
யுருக்குபடாக் காந்தமுன்னி லூசிநிக ரென்றவரோ.

(இ—ள்) இருக்கினும் - (சைதந்யத்தின் சந்நிதாநம் பற்றி) யிருந்தாலும், அசேதநத்துக்கு-சடமா யுள்ள (சரீரத்துக்கு). இச் செய லுண்டோ-இக் கன்மாதிகளைச் செய்யத் தக்க செய லுண்டாகுமோ. எனவே - என் றருச்சுநன் கேட்க, உருக்கு படா-அக்கினியினு லுருக்கப்படாத, காந்த முன்னில்-காந்த சந்நிதாநத்தி லுள்ள, ஊசி நிகர்-ஊசிக்குக் கம்பிக்குஞ் செய லுண்டாதல் போல, என்றவரோ-(ஆந்ம சந்நிதாநத் திராநின்ற சரீரத்திற்குக் கன்மச் செயல் வரக் கூடு) மென்று கூறியருளியவரோ நீர், (எ—று) 20

தார்ஷ்டாந்தம்-எஞ்சிநின்றதால் வருவித் தாம்.

சொன்னசெய லுடற்காணுற் சுகதுக்கம் யார்க்கெனவே
அன்னசுக துக்கமுந்தா னவ்வுடற்கே யென்றவரோ.

(இ—ள்) சொன்ன செயல்-(தேவரீர்) கூறிய கன்மச் செய லானது, உடற்காணுல்-சரீரத்துக் கென்று சொல்லுவீராகில், சுக துக்கம் - (கன்ம பல மாகிய) சுக துக்கங்கள், யார்க் கெனவே-எவர்களுக்குக் கென் றருச்சுநன் கேட்க, அன்ன சுக துக்கமும்-அத் தன்மை யாகிய சுக துக்கங்களும், அவ் வுடற்கே யென்றவரோ-முற் கூறிய சரீரத்துக்கே யென்று கூறியருளியவரோ நீர், (எ—று)

21

தான்-அசை.

சேதநமா மாந்மாவைச் சேராத துக்கசுக,
மோதுசட மாமுடலை யுற்றிடுமோ சொல்லுமென.

(இ—ள்) சேதநமா மாந்மாவை - சித் துருவ மாகிய வாந்மாவை, சேராத துக்க சுகம்-பொருந்தாத சுக துக்கங்க ளானவை, ஓது (இழி வுடைய தாகக்) கூறப்பட்ட, சடமா முடலை-அசேதநமா யுள்ள சரீரத்தை, உற்றிடுமோ-பொருந் துமோ, சொல்லு மென - (தேவரீர்) கூறியருள வேண்டு மென் றருச்சுநன் கேட்க, (எ—று)

ஒருவன் வாளினால் மற் றொருவனைக் கொலை செய்யில் அக் கொலையினா லுண்டாகிய தண்டனை யானது, சேதநனா யுள்ள புருடனைச் சாருமே யன்றி, யசேதநமா யுள்ள வாளி னைச் சாராதது போல, ஆந்மா, சரீரத்தாற் கன்மங்களைச் செய்யின், கன்ம பல மாகிய சுக துக்கங்கள், சேதநமாயுள்ள ஆந்மாவைப் பொருந்துமே யன்றி, யசேதநமா யுள்ள சரீரத் தைப் பொருந்தா தெனும் தன தபிப்பிராயந் தோன்ற, அருச்சுநன், 'சடமா முடலை யுற்றிடுமோ' வென்றான். 22

பூதமைந்தோ டைந்துயிர்கள் புலன்கள்பத்து மநமுத [னான்,
ஈதிருமெய் யிதின்மநத்துக் கின்பதுன்ப மென்றவரோ.

(இ—ள்) பூத மைந்தோடு-(பஞ்ச பூத காரிய மாகிய) தூல சரீரத்தோடு, ஐந் துயிர்கள் - பஞ்ச வாயுக்கள், புலன்கள் பத்து-தசேந்திரியங்கள், மந முத னான்கு - மந முதலிய அந்தக் கரண சதுட்டயம், ஈது-ஆகிய விவைகள், இரு மெய்-இரண்டு சரீரங்க ளாகும், இதில்-இவ் விரண்டு சரீரங்க ளாகப் பொருந்திய தத்துவங்களில், மநத்துக்கு-(தீபச் சுவாலையின் பரம்பரை போல விருத்தி ரூப பரிணா



மத்தை யடையாநின்ற ஓர் தத்துவ மாகிய) மநதுக்கு, இன்ப துன்ப மென்றவரோ-சுக துக்கங்க ளென்று கூறிய ருளியவரோ நீர், (எ—று)

பூத மைந் தோடைந் துயிர்கள். புலன்கள் பத்து-மந முத னான்கு-ஈது-என்றதும்-இரு மெய்-இதில்-என்றதும்-பன்மையி லொருமை மயங்கிய வழுமைதி. காரிய காரணங் களை யொற்றுமைப் படுத்தித் தூல சரீரத்தைப் பூத மைந் தென்றார். 23

இந்தவிரு வகைத்தநுவிற் கேதுவே தெனவினவ,
முந்தியகா ரணமதனான் மூன்றுதநு வென்றவரோ.

(இ—ள்) இந்த விரு வகைத் தநுவிற்கு-இப் போது சொல்லிய இரண்டு வகுப் பாகிய சரீரங்கட்கு, ஏது வே தென வினவ-மூலம் யா தென் றருச்சுநன் கேட்க, முந்திய-இவ் விரண்டிற்கு முதன்மையா யுள்ள, காரணம்-காரண மானது (அஞ்ஞாந மாம்), அதனால்-இவ் விரண்டிற்கு மூல மாகிப யஞ்ஞாந மொன்றிருத்தலால், மூன்று தநு வென் றவரோ-சரீரங்கள் மூன் றென்று கூறி யருளியவரோ நீர், (எ—று) 24

மநமறியுந் துக்கசுக வரவென்றீ ரம்மநமு,
வினவிலசே தநமலவோ விரித்தெனக்கு விளம்புமென.

(இ—ள்) துக்க சுக வரவு-சுக துக்கங்களின் வரவை, மந மறியு மென்றீர்-மந மநுபவிக்கு மென்று தேவரீர் கூறினீர், அம் மநமும்- அந்த மநமும், வினவில்-விசாரிக்கு மிடத்து, அசேதந மலவோ-(ஏனைய தத்துவங்களைப் போற் சட மல்லவோ, விரித்து-(அம் மநம் சுக துக்கங்களை அநுப வித்தற் கான ஏதுவை) விஸ்தார மாக, எனக்கு விளம்பு மென - அடியேனுக்குக் கூற வேண்டு மென் றருச்சுநன் கேட்க, (எ—று) 25

அம்மநத்தி லாந்மா வபேதம்போற் றொன்றுதலால்,
விம்முதுக்க சுகத்தைமந மேவுமென்று சொன்னவரோ

(இ—ள்) அம் மநத்தில்-அந்த மநதில், ஆந்மா-ஆத்மா வானது, அபேதம் போல்-ஒன்று போல், தோன்றுதலால்-(பிரதிபலித்துத்)தோன்றுகின்றமையால், விம்மு துக்க சுகத்தை-மிகுதியா யுள்ள துக்கசுகங்களை, மந மேவு மென்று-மநது பொருந்து மென்று, சொன்னவரோ-கூறி யருளிய வரோ நீர், (எ—று).

ஆந்மாவுக்கும், மநதுக்கும், ஞாநாஞ்ஞாந கால மாகிய வெந்தக் காலத்தினும், ஏகத்துவ மின்றென்பது தோன்ற, அபேத மாய்த் தோன்றுத லென்னாது, 'அபேதம் போற் றொன்றுத' லென்றார் 26

அந்தமநோ துக்கசுக மதனிடத்து நில்லாமல்,
வந்திலங்கு மாந்மாவை மருவியதென் சொல்லுமென.

(இ—ள்) அந்த மநோ துக்க சுகம்-அம் மநதுக் குரிய சுக துக்கங்கள், அதனிடத்து-அம் மநதிடமாகவே, நில்லாமல் - நிற்காமல், இலங்கு மாந்மாவை - (அறிவு மய மாய்) விளங்கிக் கொண்டிராநின்ற ஆத்மாவை, வந்து மருவிய தென்-வந்து பொருந்திய தெது போல, சொல்லு மென-தேவரீர் கூற வேண்டு மென் றருச்சுநன் கேட்க,(எ-று) 27

வெய்யகன லின்சூடு மேல்வைத்த சட்டியினூ,
டுய்யபுன லூடுவந்தங் கொன்றுதல்போ லென்றவரோ.

(இ—ள்) வெய்ய கனலின் சூடு-கொடி தாகிய அக்கிநியி னுஷ்ண மானது, மேல் வைத்த - மேலே வைத் திருக்கப்பட்ட, சட்டியினூடு-சட்டியினுள், உய்-அ-புன லூடு-விட்டிராநின்ற அந்தச் சலத்தின்கண், வந் தங்கு-வந்



தவ்விடத்து, ஒன்றுதல் போல்-பொருந்துதலைப் போல, (மநதின் சுக துக்கங்கள் மநோ சம்பந்த மான ஆந்மாவைப் பொருந்தியது,) என்றவரோ - என்று கூறியருளியவரோ நீர், (எ—று)

எஞ்சிய-தாஷ்டாந்தங்களை விரித் தாம்.

உய்-என்பது - தன் வினை பிற வினைகளுக்குப் பொது வாயினும், ஈண்டு பிறவினையை யுணர்த்தி நின்றது. 28

சித்தாகு மாந்மாவுஞ் செடமாகுஞ் சித்தமுந்தா,
மொத்தாங்கி ரண்டுமொன்றா யுற்றவகை சாற்றுமென.

(இ-ள்) சித்தாகு மாந்மாவும்-சேதநமா யுள்ள ஆந்மாவும், செட மாகுஞ் சித்தமும்-அசேதநமா யுள்ள மநதும், ஒத் தாங்கு, அபேதம் போல இரண்டும்-உபயமும், ஒன்றாய் - ஏக மாய், உற்ற வகை - பொருந்திய விதம், சாற்றுமென-(எங்ஙனம்) சொல்லு மென் றருச்சுநன் கேட்க, (எ—று) தான் அசை. 29

வல்லிரும்பு கனலுடனே மருவியது போன்மநமு,
மொல்லையிலாந் மாவுடனே யுற்றதுகா ணென்றவரோ.

(இ—ள்) வல்-வலுமை பொருந்திய, இரும்பு-(தூல மாகவும் அப்பிரகாச மாகவு மிராநின்ற) அய மானது, கன லுடனே-(சூட்சும மாகவும் பிரகாச மாகவு முள்ள) அக்கினி யுடனே, மருவியது போல்-(ஏக மாக)ப் பொருந்தியது போல, மநமும் - (தூல மாகவும் அப்பிரகாச மாகவு மிரா நின்ற)மநதும், ஆந்மாவுடனே- (சூட்சும மாகவும் பிரகாச மாகவு முள்ள) ஆத்மாவுடனே, ஒல்லையில் - அநாதியில், உற்றது - (ஒன்று போற்) பொருந்தியது, கா ணென்ற வரோ-நீ யறிவா யாக வென்று கூறியருளியவரோ நீர், (எ—று) 30





உற்றதேத னாலெனவே யுள்ளமவி வேகமுறப்,
பற்றியதன் மேலுமதன் பண்புவந்த தென்றவரோ.

(இ—ள்) உற்றது - (மநதுக் குரிய சுக துக்க மாத்மாவை வந்து) பொருந்தியது எதனா லெனவே - யாதினா லென் றருச்சுநன் கேட்க, உள்ளம்-மந மானது, அவிவேக முற-விவேக சூநியத்தை யடைந்தமையால், பற்றிய - அம் மநத்தினைப் பொருந்திய, தன் மேலும் - (ஆத்மா வாகிய) தன் பேரிலும், அதன் பண்பு வந்த தென்றவரோ - அம் மநதுக் குரிய சுக துக்கங்கள் வந்து பொருந்திய தென்று கூறி யருளியவரோ நீர், (எ—று) 31

அடுத்தகுணம் போமோபின் னான்மாவை விட்டெனவே,
யெடுத்தசெம்பூ நிறம்படிகத் தேறுதலபோ லென்ற
[வரோ.

(இ—ள்) அடுத்த குணம்-(அநாதி யாகவே) பொருந்தியிராநின்ற (சுக துக்கங்க ளாகிய) குணங்கள், பின்-பின் பொருகாலத்தில், ஆன்மாவை விட்டு-ஆன்மாவைப் பிரிந்து, போமோ - நீங்குமோ, எனவே - என் றருச்சுநன் கேட்க, எடுத்த-பற்றி யுள்ள, செம் பூ நிறம்-சிவந்த புட்பத்தி னிற மானது, படிகத் தேறுதல் போல்-பளிங்குக் கண்ணாடியிற் (றோற்ற மாத்திர மாக) வேறித் தோன்றுதல் போல, (ஆத்மாவிடத்திலும் மநதின் குணங்கள் அத்தியாசத்தாற் றோன்றுகின்றமையின் அவை யெதார்த்த மல்ல) என்றவரோ- என்று கூறி யருளியவரோ நீர், (எ—று)

எடுத்த-என்பதற்கு-இங்கே-பற்றிய-தாங்கிய - தரித்த- எனு மூன்றும் - பொருந்தும் - தாஷ்டாந்த மெஞ்சி நின்றதால் வருவித் தாம்.



அடுத்த குண மான்மாவை விட்டு நீங்குமோ வென்னுங் கடாவிற்கு, புட்பத்தின் செந் நிற மானது படிகத்திற் றோன்றினும் எதார்த்தத்தி லில்லாதது போல, மநதின் குணங்க ளாத்மாவினிடத்துத் தோன்றினும் எதார்த்தத்தி லில்லா திருக்க, அவைக ளாத்மாவினிடத் திருப்ப தாகக் கொண்டு) நீங்கு மென்றேனும், அல்லது, நீங்கா வென்றேனும் விடை கூற லசங்கத மாகு மாதலின், அக் குணங்க ளாத்மாவினிடத் தத்தியாசத்தாற் றோன்றுகிற தென்னும் பொரு டோன்றச் 'செம் பூ நிறம் படிகத் தேறுதல்போ' லென்றார். 32

சுத்தபடிகம்போற் சொருபமாய்த் தானிருக்க,
மெத்தவுமா சாமலிந மேவியதென் சொல்லுமென.

(இ—ள்) சுத்த படிகம் போல்-பரிசுத்த மாகிய பளிங்கினைப் போல, சொருப மாய்த் தா னிருக்க - (சச்சிதாநந்த) சொருப மாகவே யாத்மா விருக்க, மெத்தவும் - மிகவும், ஆசா மலிநம்-ஆசை யாகிய களங்கம், மேவிய தென்-ஆத்மாவினிடத்திற்) பொருந்திய தெதனாலே, சொல்லு மென (அதனைத் தேவரீர்) கூறி யருள வேண்டு மென் றருச்சுநன் கேட்க, (எ—று) 33

அநாதியாம் வாசனையா லடைந்ததா சாமலிநம்,
மநோபந்த மிருக்கின்முத்தி வாராதென் றுரைத்தவரோ.

(இ—ள்) அநாதியாம் வாசனையால்-அநாதியா யுள்ள (கரண) வாசனையால், ஆசா மலிநம் - ஆசா பாச மாகிய களங்கம், அடைந்தது - வந்து பொருந்திய தாம், மநோ பந்தம்-(அதுவே) மநதுக்குப் பந்தமு மாகும், இருக்கில்- அப் பந்த மிருக்குமானால், முத்தி வாரா தென்று-மோக்ஷஞ் சித்திக்கமாட்டா தென்று, உரைத்தவரோ-கூறி யருளிய வரோ நீர், (எ—று) 34

பந்தமெது முத்தியெது பகுத்துரைக்க வேண்டுமென்
[றன்,
சிந்தைதெ ளியவென்று திருத்தாளி னேவணங்க

(இ—ள்) பந்த மெது-பந்த மென்பது யாது, முத்தி யெது-மோக்ஷ மென்பது யாது, என் றன் சிந்தை-எனது சித்த மானது, தெளிய, (சந்தேக விபரீதங்க ளின்றித்) தெளிவை யடையும் பொருட்டு, பகுத்து-வேறு பிறித்து, உரைக்க வேண்டு மென்று-கூறி யருள வேண்டு மென்று, திருத் தாளினே-சிறப்புப் பொருந்திய வுபய திரு வடிகளே யும், வணங்க-(அருச்சுநன்) நமஸ்கரிக்க, (எ—று)

நாம முதலியவற்றுற் பிறித் தறியாமற் பொரு ளுண்மை மாத்திரை யாக நிருவிகற்பமா யறிந்த பொருளே யிஃதியாதோ வென வொன்றிற் றுணிவு பெரு தாராய்தல்-சந்தேகம். அதனே யதனே டொப்புமை யுடைய வேறு பொரு ளாக மயங்கி நிச்சயித்தல் விபரீதம். 35

தேகாதி தானெனவே சேரபிமா நங்கள்பந்த,
மாகாத மாநம்விடி லரியமுத்தி யென்றவரோ.

(இ—ள்) தேகாதி-தேகேந்திரியாதிகளில், தா னென வே-தா னென்ப தாக, சே ரபிமாநங்கள்-பொருந்ாநின்ற அபிமாநங்களே, பந்தம்-பந்த மாகும், ஆகாத - (சுருதிகட் கும் பெரியோர்கட்கு) மங்கீகார மில்லாத, மாநம் விடில்-அபிமாநத்தை விட்டுவிடில், அரிய-அதுவே யபக்குவர்களா லடைதற்) கருமை யாகிய, முத்தி யென்றவரோ - மோக்ஷ மென்று கூறி யருளியவரோ நீர், (எ—று) 36

அபிமாநம் வரும்வகையு மாங்கதுதான் நீர்வகையுந்,
தபியாம லுனறியத் தயவாகக் கூறுமென.



(இ—ள்) அபிமாநம் வரும் வகையும்-அபிமாநம் வந்து பொருந்துகின்ற விதமும், ஆங்கு-அதுபோல, அது தான் நீர் வகையும்-அவ் வபிமாநம் நீங்குகின்ற விதமும், தபியாமல்-தாப முருமல், நா னறிய-அடியே னறியும் பொருட்டு, தய வாக - கிருபை யாக, கூறு மென-அநுக்கிரகம் பண்ண வேண்டு மென் றருச்சுநன் கேட்க, (எ—று) 37

மறந்திடுமஞ் ஞாநத்தான் மாநம்வந்த தஞ்ஞாந,
மிறந்துவிடின் மாநமும்போ மென்னவுரை செய்தவரோ.

(இ—ள்) மறந்திடும் - (ஆத்மா வாகிய தன்னே) மறத்தற் கேது வாகிய, அஞ்ஞாநத்தால்-அஞ்ஞாநத்தினுல், மாநம் வந்தது-அபிமாநம் வந்து பொருந்தியது, அஞ்ஞாந மிறந்துவிடில்-அவ் வஞ்ஞாநம்-நாச முறுமாயின், மாநமும் போ மென்ன-அவ் வபிமாநமும் நீங்கிவிடு மென்று, உரை செய்தவரோ-கூறி யருளியவரோ நீர், (எ—று) 38

அந்தமுறை யஞ்ஞாந மணுகுவதும் போவதுவுஞ்,
சந்தயமில் லாதறியத் தயவாகக் கூறுமென.

(இ—ள்) அந்த முறை-முற் கூறிய கிரம மாகவே, அஞ்ஞாந மணுகுவதும்-அஞ்ஞாநம் வருதற் கான ஏதுவை யும், போவதுவும் - நீங்குதற் கான வேதுவையும், சந்தய மில்லா தறிய - ஐய மின்றி யா னறியும் பொருட்டு, தய வாக-கிருபையோடு, கூறு மென-சொல்ல வேண்டு மென் றருச்சுநன் கேட்க, (எ—று)

சந்தேகம் சந்தய மென மரியது 39

அஞ்ஞாநம் வந்தத நாதியது சொல்வதல்ல,
மெய்ஞ்ஞாநத் தாலேவி டுமென்று ரைத்தவரோ.

(இ—ள்) அஞ்ஞானம் வந்தது - அஞ்ஞான மொரு காரணத்தால் வந்த தென, சொல்வ தல்ல-சொல்லத் தக்க தல்ல, அது-அவ் வஞ்ஞான மானது, அநாதி - அநாதியா யுள்ளதே யாகும், மெய்ஞ் ஞானத்தாலே-தத்துவ ஞானத் தால். விடு மென் றுரைத்தவரோ-நீங்கி விடு மென்று கூறி யருளியவரோ நீர், (எ—று)

கடத்தினது பிராகபாவ மநாதியா யிருக்கினுங் குலால தண்டக் கிரியையா லதற்கு நாச முண்டாதல் போல, அஞ்ஞான மநாதியா யிருக்கினு, மதற்கு ஞானத்தால் நாச முண்டாதல் சித்த மாதலால், ''மெய்ஞ் ஞானத்தாலே விடு'' மென்றார். 40

இரவியெதி ரடுத்துவந்த விருட்போல வஞ்ஞானம்,
வரவிதியோ சோதிதன்பால் வந்தவகை யேதெனவே.

(இ—ள்) இரவி யெதி ரடுத்து வந்த - சூரியன் முன் பாக நெருங்கி வந்த, இருட் போல - அந்தகாரம் போல, சோதி தன் பால்-சுயம்பிரகாச மாகிய என் னிடத்து, அஞ் ஞானம் வர விதியோ-அஞ்ஞானம் வருதற்கு நியாய முளதோ, வந்த வகை-(வருதற்கு நியாய மில்லாதிருந்தும் நா னறியே னென்னு மநுபவந் தோன்ற வந்திராநின்ற) விதம், ஏ தெனவே-எதனா லென் றருச்சுனன் கேட்க, (எ—று) 41

அந்தஅறி வுவந்தா லஞ்ஞான மில்லையப்பாற்,
சந்ததமு மானந்த சாகரநீ யென்றவரோ.

(இ—ள்) அந்த அறிவு வந்தால்-நான் சுயம் பிரகாச மென்னும் ஞானம் உனக் குதயமானால், அஞ்ஞான மில்லை- அஞ்ஞானம் உன்னிடத் தில்லாத தாகும், அப்பால்-அதற் குப் பின், சந்ததமும்-சதா காலமும், நீ ஆநந்த சாகரம்-நீ பிரமாநந்த சமுத்திர மாகவே யிருப்பாய், என்றவரோ- என்று கூறி யருளியவரோ நீர், (எ—று)



பிரகாசமா யுள்ள ஆத்மாவினிடத் தப்பிரகாச மாகிய வஞ்ஞானம் வந்திருப்ப தெதனா லென்னுங் கடாவிற்கு ''அந்த அறிவு வந்தா லஞ்ஞான மில்லை'' யென்றமையால் - நான் சுயம்பிரகாச மென்னும் அதிஷ்டான ஞான முதயமாதற் குப் பூர்வம் பிரகாச மாகிய சந்திர னிடத் தப்பிரகாச மாகிய களங்க மநாதியாகவே யிருத்தல் போலப், பிரகாச மாகிய ஆத்மாவினிடத் தப்பிரகாச மாகிய வஞ்ஞான மநாதியாகவே யுள்ள தன்றி யிடையில் யாதானு மோர் காரணத்தால் வந்த தன் றென்பதே விடை யென வூகித் துணர்க.

யா தொன்று நிருவிகார மாகவும். அவித்தையாற் செய்யப்பட்ட கற்பித காரியங்கட் காசிரய மாகவு மிருக் கிறதோ, அது அதிஷ்டான மாகும்-திருஷ்டாந்தம், கற்பித சற்பத்துக்கு, இரச்சு-அதிஷ்டானம். 42

வேதாந்தத் தாற்குருவான் மெஞ்ஞானம் வந்தவுடன்,
நீதான துக்கசுகந் தீராத தேதெனவே.

(இ—ள்) வேதாந்தத்தால் - வேதாந்த சாஸ்திர சிரவ ணத்தினாலும், குருவால் - ஆசாரிய ருபதேசத்தினாலும், மெய்ஞ் ஞானம்-தத்துவ ஞானம், வந்தவுடன்-உதய மான உத்தர க்ஷணமே, தீ தான துக்க சுகம்-கொடி தாகிய சுக துக்கங்கள், தீராத தே தெனவே - நீங்காத தெதனா லென் றருச்சுனன் கேட்க, (எ—று) 43

பற்றறுமோ துக்கசுகம் பரோக்ஷஞா னத்தாலே,
யற்றமா மவ்விரண்டு மபரோக்ஷத் தென்றவரோ.

(இ—ள்) பரோக்ஷ ஞானத்தாலே - பரோக்ஷ ஞானத் தால், துக்க சுகம் - சுக துக்கங்க ளாகிய, பற் றறுமோ- பற்றுக்க ணாச மாமோ (ஆகா மற்றெதனா ணாசமா மெனின்), அவ் விரண்டும் - அவ் விரண்டு பற்றுக்களும், அபரோ

க்ஷத்து-அபரோக்ஷ ஞானத்தால், அற்ற மாம்-நாச மாகும், என்றவரோ-என்று கூறி யருளியவரோ நீர், (எ—று)

ஆல் என்னும் கருவிப் பொரு ளுணர்த்து மூன்ற னுருபு விரிக்கப்பட்டது. 44

பரோக்ஷமப ரோக்ஷமெது பகுத்துரைக்க வேண்டு
[மென்றன்,
திரோதமாம் புத்திநன்ருய்த் தெளிவுபெறு மாறெனவே.

(இ—ள்) பரோக்ஷம் அபரோக்ஷ மெது-பரோக்ஷ ஞான மென்ப தியாது அபரோக்ஷ ஞான மென்ப தியாது, எந் தன்-எனது, திரோத மாம் புத்தி-மயக்கம் பொருந்திய புத்தி யானது, நன்ருய்-நன்ருக, தெளிவு பெறு மாறு-தெளிவை யடையும் பொருட்டு, பகுத் துரைக்க வேண்டும்-வேறு பிரித்துக் கூற வேண்டும், எனவே-என் றருச்சுநன் கேட்க, (எ—று) 45

பகர்ந்தசத்த ஞானம்ப ரோக்ஷம நுபவத்தா,
லகம்பிரம மெனுஞான மபரோக்ஷ மென்றவரோ.

(இ—ள்) பகர்ந்த (அசத்தாவரண விரோதி யெனச்) சொல்லிய, சத்த ஞானம் - சாஸ்திர ஜந்ய ஞான மானது, பரோக்ஷம்-பரோக்ஷ ஞான மாகும், அநுபவத்தால்-சுவா நு பவத்தால், அகம் பிரம மெனு ஞானம்-நான் பிரம மென் னும் ஞான மானது, அபரோக்ஷ மென்றவரோ-அபரோக்ஷ ஞான மென்று கூறியருளியவரோ நீர், (எ—று) 46

தான்பிரம மென்றறிந்துந் தநுவைத்தா னென்றபுத்தி,
யேன்போக வில்லேயதை யெனக்கறியப் புகலுமென.

(இ—ள்) தான் பிரம மென் றறிந்தும்-அகம் பிரம மென் றறிந்தும், தநுவை - தேகேந்திரியாதிகளை, தா னென்ற புத்தி - அக மென்னும் புத்தி யானது, ஏன் போக வில்லே - எதனு னீங்க வில்லே, அதை - (நீங்கா திருத்தற் குள்ள) அக் காரணத்தை, எனக் கறிய - அடியேனுக் கறியும் பொருட்டு, புகலு மென - கூறி யருள வேண்டு மென றருச்சுநன் கேட்க, (எ—று) 47



கேள்வியினுன் மநநத்தாற் கிளர்ந்தயோ கங்களினு;
லாள்பிரமத் தநுபவம்வந் ததுதீரு மென்றவரோ.

(இ—ள்) கேள்வியினுல் - (சாஸ்திர) சிரவணத்தினு லும், மநநத்தால்-(அர்த்த)மநநத்தினுலும், கிளர்ந்த யோகங் களினுல்-விளங்காநின்ற தியாந யோகங்களினுலும், ஆள்-முயற்சித் (தடையத் தக்க) பிரமத் தநுபவம் வந்து-பிரமா நுபவ முதய மாகிய பின், அது-அத் தேகோக மென்னும் புத்தி யானது, தீரு மென்றவரோ - நீங்கு மென்று கூறி யருளியவரோ நீர், (எ—று

ஆள்-என்பது-முயற்சி. 48

சற் சாஸ்திரார்த்தங்களேக் குரு முன்னிலேயிற் சடு வித லிங்க . தாற்பரிய மாகச் சிரவணஞ் செய்தலேக் கேள்வி யென்ருர்.

சிரவணப் பொருளேத் தா குயினும், தனக் கொத்த சாது சங்கங்களோ டாயினுஞ். சுருதி தாற்பரிய மாகத் தர்க்க யுத்தி யநுமானங்களோடு சிந்தித்தலே மநந மென்ருர்.

மநநத்தா னிச்சயித்த பொருளே, ''யதுவே நான்'' 'நானே யது' வெனத் தயில தாரை போல, நிரந்தரம் நெடுங் காலம் நேயத்தோடு சசாதி விருத்திப் பிரவாக ருப மாகத் தியாநிக் கின்ற நிதித்தியாசநத்தை யோக மென்ருர்.

தியாந பரிபாக மாகிய சமாதியில், தியாந வஸ்து வாகிய பரமாத்மா தன் மய மாக விளங்குதலின் 'கிளர்ந்த யோக' மென்றார். 48

ஆதியாஞ் சிற்சொருப மாகாத தானினிமேற்,
சோதிமந நாதியினாற் சொருபமா மோவெனவே.

(இ—ள்) ஆதி யாம்-முதன்மை யாகிய, சிற் சொருபம்-சிந் மாத்திர சொருபம், ஆகாத தான் - (முன்னமே) ஆகா திருக்கப்பட்ட ஆந்மா, இனி மேல-பின்னர், சோதி மநநாதியினால், விசாரிக்கின்ற - மநந முதலியவைகளால், சொருப மாமோ - (சிந் மாத்திர) சொருப மாகுமோ, எனவே-என் றருச்சுநன் கேட்க, (எ—று) 49

எப்போதுஞ் சிந்மயந்தா னெனன்மறந்து தேடுவது,
சேப்புமிடற் றணியிருக்கத் தேடுதல்போ லென்றவரோ.

(இ—ள்) எப் போதும்-எந்தக் காலத்தும், சிந்மயம்-சிந் மாத்திர சொருபம், தா னெனல் - தா னென்பதை, மறந்து-அயர்ச்சித்து, தேடுவது-(அடைய வேண்டு மெனத்) தேடுகின்றது. செப்பு மிடற்று-சொல்லாநின்ற கண்டத்து, அணி யிருக்க-கண்டாபரண மிருக்கும் போது, தேடுதல் போ லென்றவரோ - (கண்டாபரண மெங் குற்றதோ வெனத்) தேடுகிறதற்குச் சமாந மாகு மென்று கூறி யருளி யவரோ நீர், (எ—று)

அணி யென்பது-இடுவன, தொடுவன, கட்டு வன, கவிப்பன, முதலிய ஆபரணங்கள் பலவற்றிற்கும் பொதுப் பெயர். 50

தேடியபின் றேகபுத்தி தீர்ந்துபோய்ச் சிற்சொருபங்,
கூடுவனோ யானென் குறைதீரச் சொல்லுமென.



(இ—ள்) தேடிய பின் - (மநநாதிகளாற்) றேடிய பிற்பாடு, தேக புத்தி தீர்ந்து போய் - தேகோக மென்னும் புத்தியானது கெட் டொழிந்து, சிற் சொருபம்-சிந் மாத்திர சொருபத்தை, கூடுவனோ யான்-யா னடைவனோ, என் குறை தீர - எனது குறை வானது நீங்கும்படி, சொல்லு மென-கூறி யருள வேண்டு மென் றருச்சுநன் கேட்க, (எ—று)

கூடுவன்-இதில், அன் விகுதி தன்மையிடத்து வந்தது. 51

வந்தவுடல் வேறாயும் வாசனையாற் றானெனலாற்,
சந்தயமென் றற்சொருபந் தானாதற் கென்றவரோ.

(இ—ள்) வந்த வுடல் - (கன்மத்துக்) கேது வாக வந்திராநின்ற சரீர மானது. வேறாயும்-அந்நியமா யிருந்தும், வாசனையாற் - ( ழக்கத்தாற் பொருந்திய மலிந) வாசனை யினால் தா னெனலால்-(அதனைத்) தா னென்று கூறுதலால், தற் சொருபம் தா னாதற்கு - தன் னுடைய சொருபந் தா னாதற்கு, சந்தய மென் - ஐயம் யா திருக்கின்றது, என்ற வரோ-என்று கூறி யருளியவரோ நீர், (எ—று)

சந்தேகம், சந்தய மென மரீயது. 52

தநுவைத்தா னெனும்பிரமை சத்தஞா நத்திலறா,
தநுபவமெய்ஞ் ஞாநத்தா லறும்வகையே துரையுமென.

(இ—ள்) தநுவைத் தா னெனும் பிரமை - தேகத்தைத் தா னென்னும் பிராந்தி யானது, சத்த ஞாநத்தி லறாது-சாஸ்திர ஜந்ய மாகிய பரோக்ஷ ஞாநத்தா னீங்காமல், அநுபவ மெய்ஞ் ஞாநத்தால்-எதார்த்தா நுபவமாகிய அபரோக்ஷ ஞாநத்தால், அறும் வகை யேது - நீங்குகின்ற வித மெங்ஙனம், உரையு மென - கூற வேண்டு மென் றருச்சுநன் கேட்க, (எ—று) 53

விளக்குவிளக் கெனுமதனால் வெய்யவிருள் போய்விடு [மோ,
துளக்கமிலா விளக்கேற்றிற் றொலையுமிரு ளென்ற [வரோ.

(இ—ள்) விளக்கு விளக் கெனு மதனால் - தீபந் தீப மெனப் பல தரஞ் சொல்லும் வசநத்தால், வெய்ய விருள் போய்விடுமோ-கொடி தாகிய அந்தகாரம் நீங்குமோ (நீங் காது), துளக்க மிலா விளக் கேற்றில் - சலந மில்லாத தீபத்தை யேற்றினால், தொலையு மிருள் - அந்தகாரம் நீங்கி விடும், (அது போல பரோக்ஷ ஞாநத்தாற் றேக நா னெனும் பிராந்தி நீங்குமா, நீங்காது, அபரோக்ஷ ஞாந முதயமாகில் நீங்கும்), என்றவரோ - என்று கூறி யருளிய வரோ நீர், (எ—று)

தாஷ்டாந்த மெஞ்சி நின்றமையின் விரித் தாம்.

விளக்கு விளக்கு என்றது, பன்மைப் பொருளில் வந்த அடுக்கு.

தேகோக மென்னும் பிராந்திக் கேது வாகிய அஞ்ஞா நத்தி னசத்தாவரண மபாநாவரண மென்னு மிரண் டமி சங்களி லசத்தாவரணத்தை மாத்திரம் நிவிர்த்திக்குஞ் சத்தி, பரோக்ஷ ஞாநத்திற் குள்ளதே யன்றி, யபாநாவரணத்தை யும் நிவிர்த்திக்குஞ் சத்தி யின்மையாற். பரோக்ஷ ஞாநத் தாற் றேகோகப் பிராந்தி நிவிர்த்தியாகா தென்பதும், அப ரோக்ஷ ஞாநத்திற் கபாநாவரணத்தையும் நிவிர்த்திக்குஞ் சத்தி யுள்ள தாகலின், அபரோக்ஷ ஞாநத்தாற் றேகோகப் பிராந்தியுங் காரண மாகிய வஞ்ஞாநத்தோடு நிவிர்த்தியாகு மென்பதும். தோன்றத், ''திருட்டாந்தமா யுள்ள இருள், 'விளக்கு விளக் கெனும் வசநத்தா னீங்கா தெனவும். துளக்க மிலா விளக் கேற்றினா னீங்கு மெனவுங்' கூறினா ரென்க.



எஞ்சிய தாட்டாந்தத்தி லுள்ள அஞ்ஞாநம், சநந மரண சம்சார துக்கத்திற் கேது வாக, ஆத்ம சொருபத்தை மறைத்திருத்தலின் மிகவுங் கொடிய தென்பது தோன்றத் தாட்டாந்தத்தி லுள்ள இருளை 'வெய்ய விரு' ளென்றார்.

எஞ்சிய வுவமேயப் பொருளா யுள்ள ஞாநம், திடாப ரோக்ஷ ஞாந மானமையின், அஃது சலந மின்றிய ஞாநமா மென்பது தோன்ற, உவமாநப் பொருளா யுள்ள தீபத் தைத், ''துளக்க மிலா விளக்'' கென்றார். 54

நெடுங்கால மாந்லவை நீங்காத வஞ்ஞாநம்,
விடுங்கால மென்றோ மெய்ஞ்ஞாநத் தாலெனவே.

(இ—ள்) நெடுங் காலம் - நீண்ட கால மாக, ஆந் மாவை நீங்காத-ஆந்மாவை விட்டு நீங்கா திருக்கப்பட்ட, அஞ்ஞாநம் - அஞ்ஞாந மானது, மெய்ஞ் ஞாநத்தால் - உண்மை ஞாநத்தால், விடுங் கால மெந்நாளோ-நீங்குகின்ற கால மெந்தக் காலமோ, எனவே-என் றருச்சுநன் கேட்க, (எ—று) 55

அந்தகா ரங்குகையி லாயிரநா ளிருந்தாலுஞ்,
செந்தீபங் கண்டவுடன் றீர்வதுபோ லென்றவரோ.

(இ—ள்) அந்தகாரம் - இரு ளானது, குகையில்- (மலைக்) குகையில், ஆயிர நா ளிருந்தாலும் - அநேக கால மாக விருக்கினும், செந் தீபங் கண்டவுடன்-செவ்வி தாகிய தீபத்தைக் கண்ட அளவிலே, தீர்வது போல்-நீங்குகின்றது போல (அளவில் கால மாந்மாவை விட் டஞ்ஞாந நீங்கா திருக்கினும் ஞாந முதய மாகிய அளவிலே நீங்கிவிடும்), என்றவரோ-என்று கூறியருளியவரோ நீர், (எ—று)

தாஷ்டாந்தங்கள் எஞ்சி நின்றமையால் விரித் தாம். 56

கருமயோ கந்தவமே காரணமாய் நீங்காம,
லருமையாய் ஞானம்வந்தோ அஞ்ஞானம் போமெனவே.

(இ-ள்) கருமம்-(யாகாதி) கருமங்கள், யோகம்-(பிராண பந்தநாதி) யோக முதலிய, தவமே காரண மாய் - (காயக் கிலேசாதி) தவங்களே காரண மாக, நீங்காமல்-நிவிர்த்தியா காமல், அருமையாய் ஞானம் வந்தோ-அடைதற் கருமையா யுள்ள ஞாந முதய மான பின்போ, அஞ்ஞானம் - அஞ்ஞாந மானது, போ மெனவே-நிவிர்த்தியாகு மென் றருச்சுநன் கேட்க, (எ—று) 57

குத்துவெட்டும் படைகளினூற் கூடுமோ விருடுரக்க,
உத்தமமாம் ரவியுதித்தா லோடுமிரு ளென் றவரோ.

(இ-ள்) குத்து வெட்டும் படைகளினல் - குத்துகிற தாயும் வெட்டுகிறதாயு முள்ள ஆயுத சாலங்களால், இருடுரக்க-அந்தகாரத்தைப் போக்குதற்கு, கூடுமோ-ஆகுமோ, (ஆகாது), உத்தம மாம் ரவி யுதித்தால்-உத்தம மான சூரிய னுதயமாகில், ஓடு மிருள் - அந்தகாரம் நீங்கி விடும் (அது போலக் கன்மாதி யோக தவங்களா லஞ்ஞாந நிவிர்த்தியா குமோ ஆகாது, ஞாந முதய மாகில் நிவிர்த்தியாகும்), என்ற வரோ-என்று கூறி யருளியவரோ நீர், (எ—று)

எஞ்சிய தாஷ்டாந்தங்களை விரித் தாம்.

எஞ்சிய தாட்டாந்தமா யுள்ள அபரோக்ஷ ஞாநம் சருவ துக்க நிவிர்த்தி-பரமாநந்தப் பிராப்த்திக் கேது வான மையின், மிகவு முத்தமமா யுள்ள தெனுங் பொரு டோன் றத் திருட்டாந்தமா யுள்ள சூரியனை - 'உத்தம மாம் ரவி' யென்றார். 58



அஞ்ஞான விருடுரக்க வறியாத நல்லகன்ம,
மெய்ஞ்ஞாநந் தனைப்பலிக்கும் விதமெவ்வா றென
[வினவ.

(இ—ள்) அஞ்ஞாந விரு டுரக்க - அஞ்ஞாந மாகிய வந்தகாரத்தைப் போக்குதற்கு, அறியாத-சாமர்த்திய மில் லாத, நல்ல கன்மம்-சற் கருமங்கட்கு, மெய்ஞ் ஞாநந் தனை-தத்துவ ஞாநத்தை, பலிக்கும் விதம்-உதிப்பிக்குஞ் செயல், எவ்வா றென வினவ - எங்ஙனங் கூடு மென் றருச்சுநன் கேட்க, (எ—று)

பலிக்கும் - என்பதில், பிறவினையை யுணர்த்தும் பிவ் விகுதி தொக்கது. பாலிக்கும்-என் றதைப் பலிக்கும் எனக் குறுக்கல் விகார மாகக் கொள்ளினு மமையும். 59

கருமமி ருவகையாங் காமியநிட் காமியமென்,
றிருவகையி னிட்காம மேதுகா ணென் றவரோ.

(இ—ள்) காமிய நிட்காமிய மென்று - காமிய கரும மென்றும் நிட்காமிய கரும மென்றும், கரும மிருவகை யாம்-கரும மிரண்டு வகையாகும், இரு வகையில்-இரண்டு பிரி வாகிய கருமங்களில், நிட்காமம் - நிட்காமிய கன்ம மானது, ஏது-ஞாநத்தை யுதிப்பித்தற்குக் காரண மாகும், கா ணென்றவரோ-நீ யறிவா யாக வென்று கூறி யருளிய வரோ நீர், (எ—று) 60

கருமமே காரணமாய்க் கட்டுரைத்தி ரிவ்வுலகை,
யொருவும் வகையையெனக் கோதென் றடிபணிய.

(இ—ள்) கருமமே காரண மாய்-நிட்காமிய கருமமே (ஞாநத்தை யுதிப்பித்தற்குக்) காரண மென்று கட்டுரைத் திர்-உறுதி பெற வருளிச் செய்தீர் (அது பொருந்தும்), இவ்

வுலகை-பிரத்தியக்ஷ மாகிய விவ் வுலகத்தினின்றும், ஒருவும் வகையை - யா னீங்குகின்ற விதத்தை, எனக்கு - அடியேனுக்கு, ஒதென் றடி பணிய - கூறி யருள வேண்டுமென்று திரு வடியி லருச்சுநன் நமஸ்கரிக்க, (எ—று)

உலகின்-எனற் பால தாகிய ஐந்தாம் வேற்றுமை யுருபு, உலகை யென இரண்டாவத னுருபாக மயங்கிற்று.

இந்திரஜா லம்போல விவ்வுலகை நம்மிடத்திற்,
றந்திரமாய்த் தோற்றுவித்தோஞ் சத்தியமல வென்ற
[வரோ.

(இ—ள் இந்திர ஜாலம் போல - (அற்புதங்களைக் காட்டு) மிந்திர ஜால வித்தையைப் போல, இவ் வுலகை - இந்தப் பிரபஞ்சத்தை, நம்மிடத்தில்-(பிரம சொருப மாகிய) நம்மிடத்தில், தந்திர மாய் - அலங்கார மாக, தோற்றுவித்தோம்-தோன்றும்படி செய்வித்தோம் சத்திய மல வென்ற வரோ-(இது) எதார்த்த மல்ல வென்று கூறியருளியவரோ நீர், (எ—று)

இந்திரஜாலத்தாற் றோன்றிய யானை முதலிய மிருகங்க டன்னைச் சூழ்ந்த தாகக் கண் டச்சமுற் றிவைகட் ககப்படாது நீங்க வேண்டு மென் றெண்ணிய பிராந்த, னிவைகளிந்திர ஜாலத்தாற் றோன்றிய பொய் மிருகங்க ளென் றறிதலே, அவைகளி னின் றும் நீங்கிய தாகு மெனல் போல், மாயையாற் றோன்றிய விவ் வுலகை, மித்தை யென் றறிதலே, யிவ் வுலகினின்றும் நீங்கிய தாகு மென்பது தோன்றச், 'சத்திய மல' வென்றார். 62

மித்தையெனுஞ் சகத்துநின்பால் விளங்குமோ வென
[வினவ,
சுத்திதனி லேரசதந் தோன்றுதல்போ லென்றவரோ.



(இ—ள்) மித்தை யெனுஞ் சகத்து-பொய் யென்று சொல்லப்பட்ட பிரபஞ்ச மானது, நின்பால்-(சத்திய மாகிய) உம்மிடத்தில், விளங்குமோ வென வினவ - தோன்றுமோ வென் றருச்சுநன் கேட்க, சுத்திதனிலே-(சத்தியமா யுள்ள) கிளிஞ்சியினிடத்திலே ரசிதம்-(மித்தையா யுள்ள) வெள்ளி யானது, தோன்றுதல் போல்-தோன்றுகிறது போல (சத்தியமா யுள்ள நம்மிடத்தின் மித்தையா யுள்ள பிரபஞ்சந் தோன்றிய தாம்), என்றவரோ-என்று கூறி யருளியவரோ நீர், (எ—று). 63

அயல்வெள்ளி சுத்தியின்மே லாரோபி தங்கூடு,
மியலுள்ள சகமுமுன்வே றிருந்ததுமுண் டோவெனவே

(இ—ள்) அயல் வெள்ளி-அந்நியமா யுள்ள வெள்ளி யானது, சுத்தியின் மேல்-(சத்திய வஸ்து ஞான ஜந்ய சமஸ்காராதி தோடத்தால்) கிளிஞ்சியி னிடத்து, ஆரோபிதங் கூடும் - ஆரோபித மாகத் தோன்றுதல் பொருந்தும் (அது போல்), இய லுள்ள ஜகமும்-இயல்பா யுள்ள பிரபஞ்சமும், முன்-(சிருஷ்டிக்குப்) பூர்வம், வே றிருந்தது முண்டோ-(மித்தையாப் பிரபஞ்சத்துக்கு) அந்நிய மாக விருந்தது முளதோ, எனவே-என் றருச்சுநன் கேட்க, (எ—று). 64

மாமயக்கம் பிடிக்கிலில்லா வஸ்துவுந்தோன் றிடுமது
[வோ,
கனவில்விண் ணிற் றுன்பறக்கக் கண்டதுபோ லென்ற
[வரோ.

(இ—ள்) மா மயக்கம் பிடிக்கில் - மாம் பிராந்தியை யடையில், இல்லா வஸ்துவுந் தோன்றிடும் - இல்லாத

பதார்த்தங்களும் தோன்றும், அதுவோ - அஃதெங்ஙன மெனின், கனவில் - சொற்பனத்தில், விண்ணில் - ஆகாயத்தில், தான் பறக்க-(முன்னம் பறவாதிருக்கப்பட்ட) தான் பறந்து செல்வ தாக, கண்டது போல் - பார்த்தல் போல (பிரபஞ்ச முன் னில்லாததா யிருக்கினும் அஞ்ஞாந தோடத்தா லாரோபித மாகத் தோன்றவுங் கூடும்), என்றவரோ-என்று கூறி யருளியவரோ நீர், (எ—று). எஞ்சிய தாஷ்டாந்தம் விரிக்கப்பட்டது. 65

கனவுபோற்பிர பஞ்சமென்றீர் கண்விழித்தாற் கனவு
[பொய்யாம்,
வினவுசகந் திநமுமெய்யாய் விளங்குவதென் சொல்லு
[மென.

(இ—ள்) கனவு போற் பிரபஞ்ச மென்றீர் - சொற்பனத்தைப் போலப் பிரபஞ்சமு (மித்தை) யென்று கூறினீர், கண் விழித்தால்-கண் விழித்த லாகிய சாக்கிரத்துக்கு வந்த மாத்திரத்தில், கனவு பொய் யாம்-சொற்பன மித்தையாய் விடுகிறது (அங்ஙன மின்றி). வினவு சகம்-(சொற்பன சமாந மாக) விவகரிக்கப்பட்ட பிரபஞ்ச மானது, திநமும்-நாள் தோறும், மெய் யாய் விளங்குவது-சத்திய மாக விளங்கிக் கொண் டிருப்பது, என் சொல்லு மென - எதனாலே கூறி யருள வேண்டு மென் றருச்சுநன் கேட்க. (எ—று)

கனவு போற் பிரபஞ்ச மென்று பகவான் கூறியிருப்பது போலவே-கைவல்லிய நவநீதத்தில், "காண்ப வெல்லாஞ் - சொற்பனம் போலு மென்றே துணிந்தவன் ஞாநி யாவான்" எனக் கூறியிருப்பது காண்க. 66

மெய்யாக விளங்குவது மெய்ஞ்ஞாநம் வருமளவும்,
பொய்யாம்பின் கனவதுபோற் போதம்வரி லென்ற
[வரோ.



(இ—ள்) மெய் யாக - (பிரபஞ்சஞ்) சத்திய மாக, விளங்குவது-விளங்கிக் கொண்டிருப்பது, மெய்ஞ் ஞாநம் வரு மளவும் - தத்துவ ஞாந முதய மாகும் பரியந்தமும், போதம் வரில் - தத்துவ ஞாந முதய மாகில், பின்-பிற்பாடு, கனவது போல்-சொற்பன (மித்தை யாவது)போல, பொய் யாம்-(பிரபஞ்சமு) மித்தையாய் விடும், என்றவரோ-என்று கூறி யருளியவரோ நீர், (எ — று).

சகந் திநமு மெய் யாக விளங்குவ தெதனு லென்னுங் கடாவிற்கு, மெய் ஞாநம் வரு மளவு மென்றமையால், மெய் ஞாந முதய மாதற்குப் பூர்வ முள்ள அஞ்ஞாநமே பிரபஞ்ச மெய் யாக விளங்குகிறதற்குக் காரண மென்பது விடை யென வூகித் துணர்க. 67

முன்புகண்ட கனவுபொய்யா மொழிசாக்கிரம் போல
[வென்றீர்,
பின்புமுத்தித் திசையடைந்தும் பிரபஞ்சநிற்ப
[தேதெனவே.

(இ—ள்) மொழி சாக்கிரம்-(ஸ்திர மென்று) சொல்லத் தக்க சாக்கிராவத்தையில், முன்பு கண்ட - பூர்வங் கண்ட, கனவு-(அஸ்திர மாகிய) சொற்பநம், பொய் யாம் போல-மித்தை யாவது போல (ஞாந சாக்கிரத்தில் பிரபஞ்சமு) மித்தை யாய் விடும், என்றீர்-என்று கூறி யருளினீர், பின்பு முத்தித் திசை யடைந்தும் - மோக்ஷ நிலமையை யடைந்த பிற்பாடும், பிரபஞ்ச நிற்பது - பிரபஞ்சந் தோன்றிக் கொண் டிருப்பது, ஏ தெனவே-எதனு லென் றருச்சுநன் கேட்க, (எ—று). 68

தெரிந்தவர்க்குத் தோற்றுவது தெத்தபடம் போல்வ
[தல்லாற்,
பரந்தசகங் காரியத்திற் பயன்படா தென்றவரோ.

(இ—ள்) தெரிந்தவர்க்கு – (சொரூபத்தை) யறிந்தவர்க்கு, தோற்றுவது-தோற்றுவ தாகிய, பரந்த சகம்-(நாமரூபாத்மக மாக) விரிந் துள்ள பிரபஞ்ச மானது, தெத்தபடம்-(அக்கினியினு) லெரிந்த வஸ்திரம், போல்வ தல்லால்-போன்ற தாகுமே யல்லாமல், காரியத்தில் - (பந்த முதலிய) காரியங்களைத் தருதற்கு, பயன்படா தென்றவரோ - உபயோகப்படா தென்று கூறி யருளியவரோ நீர், (எ—று).

அக்கினியினு லெரிந்த வஸ்திரம், வஸ்திரம் போற்றோன்றுதன் மாத்திரமே யன்றிக், குளிர் நீக்குதன் முதலிய காரியங்கட் குபயோக மாகாதது போல, ஞானிகட்குப் பிரமாத்மைக்கிய ஞானத்தால் வாத மாகிய பிரபஞ்சம், நாமரூபாத்மக மாகத் தோன்றுதன் மாத்திரமே யன்றிப், பந்த முதலிய காரியங்களைத் தருதற் கேது வாகாமையின், “காரியத்திற் பயன்படா” தென்றார். 69

கன்மவினை யஞ்ஞானங் கடந்துமதன் காரியமாம்,
புன்மையுறு மெய்யுடனே போகாத தேதெனவே.

(இ—ள்) கன்மம்-(ஆகாமிய சஞ்சித) கன்மங்களும், வினை-வஞ்சிக்கு-மியல்பினை யுடைய, அஞ்ஞானம்- அஞ்ஞானமும், கடந்தும்-நீங்கியும், அதன் காரிய மாம்-அவ் வஞ்ஞான காரிய மாகிய. புன்மை யுறு மெய்-இழிவு பொருந்திய சரீர மானது. உடனே - (கன்மமு மஞ்ஞானமு நீங்கிய) அந்த உத்தர க்ஷணமே, போகாத தே தெனவே-நீங்காத தெதனு லென் றருச்சுநன் கேட்க, (எ—று).

கன்ம வினை யென் னும் பதங்கட்கு ஆகாமிய சஞ்சித கன்மங்களாகிய வினைகளும், எனப் பொருள் கூறுவது முள. 70



வெட்டவிழு மரம்பசந்து விளங்குதல்போற் சிலகால,
நட்டகன்ம மாய்ந்துமங்க நடித்திடுங்கா ணென்றவரோ

(இ—ள்) வெட்ட விழு மரம்-(ஒருவரால்) வெட்டப்பட்டு விழுந்த மர மானது, பசந்து விளங்குதல் போல்-பசுமை யாகச் (சொற்ப நேரம்) விளங்கிக் கொண்டிருத்தல் போல, நட்ட கன்ம மாய்ந்தும்-(தான்) செய் துள்ள கன்ம நசித்தும், அங்கம் - (அதன் காரிய மாகிய) சரீரம், நடித்திடும்-நட மாடிக் கொண் டிருக்கும், கா ணென்றவரோ - நீ யறிவா யாக வென்று கூறி யருளியவரோ நீர், (எ—று). 71

சென்மம்போய் முத்தியினைச் சேரச்சி லரிருக்கத்,
தொன்மையாங் மாப்பலவோ சொரூபம் பகருமென.

(இ—ள்) சென்மம் போய் - சன்ம மானது நீங்கி, முத்தியினை-மோக்ஷத்தை, சேர-(சில)ரடைய, சில ரிருக்க - சில (ரடையாமற் பந்த முடையரா) யிருக்கக் காணப்படுகின்றமையால், தொன்மை-பழமையா யுள்ள, ஆன்மாப் பலவோ-ஆன்மா அநேகமோ, சொரூபம் பகரு மென-(ஆன்மாவின்) சொரூபத்தைக் கூற வேண்டு மென் றருச்சுநன் கேட்க, (எ—று).

சிலர் என்றது முன்னருஞ் சென்றியையும், பந்த மென்றது அவாய் நிலையான் வந்தது. 72

பிரமமென்று மீசனென்றும் பெருகுபல சீவரென்று,
முரைமயக்க மலதாங்மா வொருவனே யென்றவரோ.

(இ—ள்) பிரம மென்றும் - (குண ரகிதமா யுள்ள,) பிரம மென்றும், ஈச னென்றும்-(சர்வஞ்ஞத்துவாதி குண விசிட்டனு யுள்ள) ஈசுவர னென்றும், பெருகு - (கிஞ்சிஞ்

ஞத்துவாதி குணங்க) ணிறைந் துள்ள, பலசீவ ரென்றும்-அநேக சீவர்க ளென்றும், உரை - (வேறு படுத்திச்) சொல்வது, மயக்க மலது-பிராந்தியே யல்லாமல் (எதார்த்த மல்ல), ஆந்மா வொருவனே-ஆத்மா வொருவ னெனலே (எதார்த்தம்), என்றவரோ-என்று கூறியருளியவரோ நீர், (எ—று)

உரை-முத னிலைத் தொழிற் பெயர். 73

ஏகந்தா னாந்மா வெனும்வகையே மெய்யானு,
லாகந்தோ றும்பலவா யமர்ந்ததென்னே சொல்லுமென

(இ—ள்) ஆந்மா - ஆந்மா வானது, ஏகந் தான் - ஒன்றே, எனும் வகையே-என்று கூறும் விதமே, மெய்யானால்-சத்திய மானால், ஆகந் தோறும் - சரீரங்கள் யாவற்றிலும், பல வாய்-பல வாந்மாக்க ளாக, அமர்ந்த தென்னே-பொருந்தி யிருப்ப தென்னையோ, சொல்லு மென - கூறியருள வேண்டு மென் றருச்சுநன் கேட்க, (எ—று).

தோறும் என்றது, பன்மைப் பொருளில் வந்த இடைச் சொல். 74

பலகடத்திற் சலத்தூடு பானுவிம்பந் தோன்றுதல்போற்
றொலைவில்புத்தி தொறுமாந்மாத் தோன்றுதல்கா
[ணென்றவரோ.

(இ—ள்) பல கடத்தில்-பல கடங்களி லுள்ள, சலத்தூடு-சலங்களினுள், பாநு விம்பம் - சூரிய விம்ப மானது, தோன்றுதல் போல்-(பல வாகப் பிரதிபலித்துத்) தோன்றுகிறது போல, தொலைவில் புத்தி தொறும் - அள வில்லாத புத்திகள் தோறும், ஆந்மா - (ஏகமா யுள்ள) ஆந்மா வானது, தோன்றுதல் - (பல வாந்மாக்க ளாகத்) தோன்றுகிறது, காண் - நீ தெரிந்து கொள்வா யாக, என்றவரோ - என்று கூறி யருளியவரோ நீர், (எ—று). 75



ஆதித்தன் போலாந்மா வளவில்புத்தி தொறுந்
[தோன்றிற்
சாதிக்கு முத்தியெவர் தமக்கதனைச் சாற்றுமென.

(இ—ள்) ஆதித்தன் போல் - (ஒன்று யிருந்தும் உபாதி வசத்தாற் பல வாகத் தோன்றுகின்ற) சூரியனைப் போல, ஆந்மா-ஏகமா யுள்ள ஆந்மா வானது, அளவில் புத்தி தொறும் - அள வில்லாத புத்திக ளாகிய வுபாதிகடோறும், தோன்றில் - (பல வாகத்) தோன்றுமேயானால், சாதிக்கு முத்தி - அப்பியாசித் தடையத் தக்க மோட்சமானது, எவர் தமக்கு-எவர்கட்கு, அதனைச் சாற்று மென-அதனைக் கூறி யருள வேண்டு மென் றருச்சுநன் கேட்க, (எ—று). 76

பந்தமுத்தி தானுமந்தப் பரந்தபுத்தி தனக்கேயா,
மந்தவிம்பந் தனக்கிலையென் றறிவுவரச் சொன்னவ
[ரோ.

(இ—ள்) பந்த முத்தி தானும்-பந்த மோக்ஷ மென்பதும், அந்த-முற் கூறிய, பரந்த புத்திதனக்கே யாம்-(விடயங்களிற் பரவிய) புத்திக்கே யாகும், அந்த விம்பந்தனக்கு-அழகிய விம்ப சொரூப மாகிய ஆத்மாவிற்கு, இலை யென்று-(பந்த முத்தி) யில்லை யென்று, அறிவு வரச் சொன்னவரோ-ஞான முதய மாகும்படி சொல்லி யருளியவரோ நீர், (எ-று).

பந்தமு, முத்தியும், புத்திக்கே யன்றி, "அந்த விம்பந்தனக்கிலை" யென்று பகவான் கூறி யிருப்பது போலவே, வாசிட்டத்தில், "துங்கமெய் யுணர்வாய்ப் பந்தமற் றிருந்துந் தொடர்புறு பந்தமுண் டென்று, பங்கமுற் றயரே லமலமா யழியாப் பரம்பொருள் பந்தமுற் றிடுமோ".எ-ம், "அந்தமற் றொன்றாய் விகற்பமற் றறிவா யழிவிலாப் பரம்பொரு ளிருக்கப், பந்தமுற் றவரார் முத்திபெற் றவரார் பாவனை விகற்பமே யனைத்துஞ், சிந்தனை விரிவு பந்தமா மதனைத் தீர்ந்திடன் முத்தியாம்", எ-ம்-அருளிச் செய்திருப்பது காண்க. 77

பரமேக மாயுமதிற் பலசீவ ரேதெனவே,
யொருகடலிற் பலகுமிழி யுதிப்பதுபோ லென்றவரோ.

(இ—ள்) பர மேக மாயும் - பிரமம் ஒரு தன்மைய தாக விருந்தும், அதில் - அப் பிரமத்தில், பல சீவர் - பல தன்மைய வான சீவர்கள், ஏ தெனவே - தோன்றுகின்ற தெங்ஙன மென் றருச்சுநன் கேட்க, ஒரு கடலில் - ஒரு தன்மைய தான சமுத்திரத்தில், பல குமிழி - பல தன்மைய வான புற்புதாதி பேத தரங்கங்கள், உதிப்பது போல்-(காற்றின் செயலாற்) றோன்றுவது போல, (ஒரு தன்மைய தான பிரமத்திற் பல தன்மைய வான சீவர்கள் கன்மச் செயலாற் றோன்றுவார்கள்) என்றவரோ-என்று கூறி யருளியவரோ நீர், (எ—று).

'குமிழி' என்றதனால், அதற் கினமா யுள்ள பேத தரங்கங் களையும் வருவித் தாம். 78

சீவனது தானென்றுஞ் சேரும்பி ரமமென்று,
மாவதுவோ பேரின்ப மாங்கதெனக் கோதுமென.

(இ—ள்) சீவன் - சீவனே, தா னென்றும் - தனது சொரூப மென்றும், அது - அச் சீவ னனது, பிரமம் - பிரமத்தை, சேரு மென்றும் - அடையு மென்றும் (சிலர் கூறுகின்றபடி), ஆவதுவோ - ஆகின்றதுவோ, பே ரின்பம் - பிரமாநந்தம், அ தெனக்கு - அப் பிரமாநந்த (முதய மாகும் விதத்தை) யடியேனுக்கு, ஓது மென-அநுக்கிரகம் பண்ண வேண்டு மென் றருச்சுநன் கேட்க, (எ-று).

ஆங்கு-அசை, பிரமம்-என்பதில், சாரியையும், இரண்டனுருபுந், தொக்கன. 79



ஏகம்பி ரமமி ரண்டிலைநீ வேறுமல,
சோகமுறும் பேதமறிற் றோன்றுமின்ப மென்றவரோ.

(இ—ள்) ஏகம் பிரமம் - பிரம மொன்றே யாகும், இரண் டிலை. (சசாதி-விசாதி-சுவகத பேத மாகிய) துவிதங்க ளில்லை, நீ-(ஆந்மா வாகிய) நீ. வேறு மல-பிரமத்துக் கந்நிய மு மல்ல, சோக முறும்-துக்கத்தைப் பொருந்துவதற் கேது வாகிய, பேத மறிதல் - பேதப் பிராந்தி நீங்குமே யாகில், இன்பம்-பிரமாநந்த மானது, தோன்று மென்றவரோ-(சுயமாகவே) உதய மாகு மென்று கூறி யருளியவரோ நீர், (எ—று).

ஏகம் பிரம மிரண் டிலை யெனப் பகவான் கூறி யிருப்பது போலவே, வாசிட்டத்தில் - "பொருகடலிற் றிரைமுதலாய்ப் பிறந்த வெல்லாம் புனலாகி விளங்காமற் புழுதியாமோ, வொருபொருளாம் பிரமமாத் திரமே யல்லா லுபயமெனுங் கற்பனைப்பே ரொன்று மில்லை, யெரியிடத்திற் சூடுமாத் திரமே யல்லா லிரண்டுண்டோ வவ்வகைபோ லென்று மொன்றும்"-எனவும் - வேதாந்த சூடாமணியில்- "சுருதியினு ளேகமே வாத்துவித மென்னுஞ் சொற்கிடையு ளேகமெனுஞ் சொல்லதனுக் கயிக்க, மரிதிலுணரேவவென்னு மிடைச்சொற்குத் தேற்ற மத்துவித மெனு மொழிக்குத் துவிதவிலக் காகக், கருதுபொருள் வருதலினு லிம்முறையே மாயா கற்பனைகள் கடந்துநிர வயமாகி யென்றுந், திரிதலில்சிந் மயமாகு மொருபிரமந் தனக்குத் தெரித்தசுவ கதமுதலா யினமூன்று மிலையே"-எனவும்- பிரம கீதை 11-வது கடவல்லியோடு சுவேதாச்சுவதர வுபநிடதார்த்தங்க ளுரைத்த வத்தியாயத்தில், "பரம்பரனை

யல்லா தொன்று மில்லையென வநுப வத்தா லகத்துணர-வல்லார் தமக்குப் பேரின்பம் வடிவாய் மொழியு மாமறை தான்''-எனவுங் கூறியிருப்பது காண்க.

பேதப் பிராந்தியி னிலக்கணத்தையும், அப் பிராந்தி நிவிர்த்தியாதற் குரிய திருட்டாந்த சகித மாகிய விசாரங்களையும், அறிய விரும்பில், விசார சந்திரோதயம். 6-வது கலையிற் காண்க. 80

சீவபே தம்போமோ சித்தொன்ரு மோவெனவே,
யாவன்மந மறுஞ்சுழுத்தி யவத்தையிற்பா ரென்றவ [ரோ.

(இ—ள்) சீவ பேதம் போமோ-சீவத்துவாதி பேதங்கணீங்குமோ, சித் தொன்ருமோ வெனவே - ஒன் ருகிய சிந்மாத்திர சொரூப மாகுமோ வென் றருச்சுநன் கேட்க, ஆவல் மநம் - (விடயங்களி) லிச்சை யுள்ள மந மானது, அறுஞ் சுழுத்தியவத்தையில் - கெட்டுப் போகாநின்ற சுழுத்தியவத்தையில், பா ரென்றவரோ-பார்ப்பா யென்று கூறி யருளியவரோ நீர். (எ—று).

அவத்தை யென்பது காலம். 81

பேதமல விவ்வுலகம் பிரமமய மென்றறிந்தும்,
பூதமய மாய்த்தோற்றல் போகாத தேதெனவே. 82

(இ—ள்) இவ் வுலகம் - இந்தப் பிரபஞ்ச மானது, பேத மல-(பிரமத்துக்கு) வே றல்ல, பிரமமய மென் றறிந்தும்-பிரம சொருபமே யென் றறிந் திருந்தும், பூத மயமாய்த் தோற்றல் - பஞ்ச பூத மய மாகத் தோற்றுதல், போகாத தே தெனவே - நீங்காதது யாதினு லென் றருச்சுநன் கேட்க. (எ—று).



'மய' மென்றதில்-தேற் றேகாரம் விகாரத்தாற் ஜெக்கது.

'இருந்தும்' என்றதி லுள்ள உம்மை உயர்வு சிறப்புப் பொருளது. 82

கானலைநீ ரென்ருேடிக் கண்டவர்க்குத் தீர்ந்தபின்னும்,
வானுலவு நீராகி வயங்குதலபோ லென்றவரோ 83

(இ—ள்) கானலை நீ ரென் ருேடி-பேய்த்தேரினைச் சலமெனக் கருதிச் சென்று, கண்டவர்க்கு - (இது சல மல்ல பேய்த்தே ரென் றறிந்தவர்க்கு) தீர்ந்த பின்னும்-சல மென்னும் பிராந்தி) நீங்கிய பின்னரும், உலவு - செல்லுகின்ற, வான்-சிரேஷ்டம் பொருந்திய, நீ ராகி - சலம் போலாகி, வயங்குதல் போல்-(பேய்த் தேர்) தோன்றுதல் போல, (பிரபஞ்சத்தைப் பிரம மய மாக வறிந்திருக்கினும் பஞ்ச பூத மய மாகத் தோற்றிக் கொண்டிருக்கும்). என்றவரோ-என்று கூறி யருளியவரோ நீர், (எ—று).

எஞ்சிய தாட்டாந்தத்தை விரித் தாம்-பிராந்தி என்றது அவாய் நிலையான் வந்தது. 83

அறிவானு நல்லறிவு மறியப்ப டும்பொருளும்,
பிறிவாய்மூன் ருயிருத்தல் பேதமல வோவெனவே. 84

(இ—ள்) அறிவானும் - ஞாதிருவும். நல் லறிவும்-நன்மை யாகிய ஞாநமும், அறியப்படும் பொருளும் - அறியப்படுவ தாகிய ஞேயமும், பிறி வாய் - வெவ் வே ருய், மூன்ரு யிருத்தல்-திரி புடி யாக விருக்கின்றது, பேத மல வோ வெனவே-(ஒன்றே பொரு ளென்னு மத்துவித சித்தாந்தத்திற்கு) விரோத மல்லவோ வென் றருச்சுநன் கேட்க, (எ—று). 84

சொற்பநத்திற் றனித்தொருவன் றோற்றம்வே றில்லை [யங்கே,
கற்பனையாம் பொருளறிவு காண்பவன்போ லென்ற [வரோ.

(இ—ள்) தனித் தொருவன் - தனித்து நித்திரை பண்ணுகின்ற வொருவனது, சொற்பநத்தில் - சொற்பநாவஸ்தையில், தோற்றம்- (தோன்றுகின்ற திரி புடித்) தோற்றங்கள், அங்கே போல- அச் சொற்பநாவஸ்தையிற் (சொற்பந திருஷ்டாவுக் கந்நிய மாக வில்லாதன) போல, கற்பனையாம்-பொய் யாகிய, பொருள்-ஞேயமும், அறிவு-ஞாநமும், காண்பவன்-ஞாதிருவும். வே றில்லை யென்றவரோ - சாக்ஷி சைதந்நியத்துக் கந்நிய மாக வில்லை யென்று கூறி யருளிய வரோ நீர், (எ—று). 85

கற்பனையாம் பேதங்கள் காணாமற் போம்வகையை,
விற்பனமா யானறிய விளம்புமென வேவணங்க. 86

(இ—ள்) கற்பனை யாம் பேதங்கள் - பொய் யாகிய திரி புடிப் பேதங்கள், காணாமற் போம் வகையை-தோன்றாமற் போகின்ற விதத்தை, விற்பன மாய் - சுருதி, யுத்தி, யநுபவ மாக, யா னறிய - அடியே னறியும் பொருட்டு, விளம்பு மெனவே - அநுக்கிரகம் பண்ணவேண்டு மென்பதாக, வணங்க-(அருச்சுநன்) நமஸ்கரித்து வினவ, (எ-று)86

துரியமாம் யோகத்தாற் றூயமநம் லயமானா,
லரியமூ வகைவிகற்ப மழியுமென்று சொன்னவரோ.

(இ-ள்) துரிய மாம்—துரியாவத்தையை யடைதற் கேது வாகிய. யோகத்தால்-[லயம், விக்ஷேபம், கஷாயம் ரசாஸ்வாத மென்னும் நான்கு பிரதிபந்தங்களு மின்றித்



தியாநிக்கின்ற] நிதித்தியாசநத்தால், தூய மநம்—பரிசுத்த மாகிய (சாத்வீக) மநதும், லய மானால்-பிரம சொரூபாகார மாக வொடுங்கு மானால், அரிய மூ வகை விகற்பம்-நீங்குதற் கருமையா யுள்ள திரி புடி விகற்பங்கள், அழியு மென்ற— தோற்ற மின்றிக் கெடு மென்று, சொன்னவரோ—சொல்லி யருளியவரோ நீர், (எ—று).

தியாந நிமித்தம் விடயங்களினின்றுந் திருப்பப்பட்ட மநது, தியாநத்திற் பிரவிருத்தியாது, வெகு நாட் பழகிய சுழுத்திப் பழக்கத்தாற் சுழுத்தியிற் செல்வது லய மாம்.

லயத்துக்குக் காரண மாகிய நித்திரா சேட மசிரண, மதிக போசநஞ், சரீர சிரம மென்னும் நான்கிற், குறை வற நித்திரை செய்தலா னித்திரா சேடத்தையும், முன் புசித்த அந்ந முதலியவை சீரணிக்கும் பரியந்தம் போசநஞ் செய்யா திருத்த, லற்ப போசநஞ் செய்குதன் முதலிய வேதுக்களா, லசீரணத்தையு, மதிக போசநத்தையும். அலைச்சல் முதலிய தொழில்க ளின்றி யிருத்தலாற், சரீர சிரமத்தையும், நீக்கு வித்தலாலேனும், அல்லது, பிராணாயாமத்தாலேனும், லயத்தினின்றுந் திருப்பப்பட்ட மநது, திநந் தோறும் பழகிய சாக்கிர சமஸ்காரத்தாற், சத்தாதி விடயங்களையும், விடய போகங்களையும், கருதி, யவைகளிற் பிரவருத்திப் பதே விக்ஷேப மாம்.

சத்த முதலிய போக்கிய விடயங்களின் அசுத்தாதி யிலக்கணங்களையு, மவைகளை யடைதலால் வருந் துக்கங் களையும், பிரமத்தின் சச்சிதாநந்த விலக்கணங்களையு, மதனை யடைதலால் வரும் பரம சுகத்தையும், சிந்தித்துப் பார்க்கு தலாலேனும், அல்லது, சாக்கிர சொற்பநங்கள் சுழுத்தியி

லில்லாதன போல, அசத்து ரூப மாகிய போக்கிய விடயங்கள், சத்து ரூப மாகிய பிரமத்தி லில்லை யெனப் பார்க்கின்ற வாத திருட்டியினுலேனும்–அல்லது, விடயங்கள் தோணினுஞ் சொற்பநஞ் சுத்திகா ரசித போற், பொய் யெனப் பார்க்கு மித்தையா திருஷ்டியினுலேனும், அல்லது, நாநாவித பேத தரங்க புற்புத திவலைக ளனைத்தையுஞ் சல மய மாகப் பார்க்குதல் போல, நாநா வித பேத போக்கிய வஸ்துக்க ளாகிய திரிசியங்க ளனைத்தையு,மகண்டைக ரசப் பிரம மாகிய தனது சொரூப மாகவே பார்க்கின்ற தன் மய திருட்டியினுலேனும், அடிக் கடி யுதய மாகின்ற சகல விக்ஷேபங்களையுஞ், சாக்கிரதையா யிருந்து நாசஞ் செய்து திருப்பப்பட்ட மநது, பின்னரும் லய விக்ஷேபங்களிற் செல்லுமாயி, னதனை நிரோதித்துத் தியாநம் பண்ணும் போ, தம் மநது, தீவிர ராகத் துவேஷாதி வாசனையினுற் றுக்கங்களின் மூழ்கிச் சமாதியிற் போ, லேகாக்கிரமா யிருத்தலே கஷாய மாம்.

கஷாயத்தை, யிதுவே சமாதி யெனப் பிரமிக்காமல், விவேக புத்தியாற் சூட்சும மாகப் பார்த்து விக்ஷேப நிவிர்த்திக்குக் கூறிய வுபாயங்களா னிவிர்த்தித்துத் தியாநஞ் செய்து வருங்காற், சமாதி யாரம்பத்திற் சவிகற்ப மாக வுதிக்கின்ற ஆநந்தாநுபவத்தை, யிதுவே பரமாநந்தாநுபவ மென் றவ்வாநந்தத்திற் றுனே மநது மூழ்கி யிருத்தல், ரசாஸ்வாத மாம்.

(வினு)–ரசாஸ்வாதத்தையும் பிரதிபந்த மாகக் கூறிய தென்னை யெனின்–

(விடை)–ரசாஸ்வாத மென்னும் விகற்ப சகித மாகிய ஆநந்த மானது, இதுவே பரமாநந்த மென மநது மூழ்கி



மே லான நிருவிகற்ப மாகிய ஆநந்ததை யடைய விரும்பா திருத்தற் கேதுவா யிருத்தலின், பிரதிபந்த மெனக் கூறிய தென்க

(வினு)-நிருவிகற்ப மாகிய பரமாநந்த மெங்ஙன மநுபவிக்கக் கூடு மெனில்.

(விடை)–ரசாஸ்வாதத்திற் றுனே நின்று விடாமல் விவேகத்தால் நீங்கித் தயில தாரை போல, நிரந்தரம் நெடுங் காலம் நேயத்தோடு லய முதலிய பிரதிபந்தங்க ளின்றித் தியாநிக்கின்ற தியாநாப்பியாச பலதினுலு, மீசுவர கிருபையினு லுந், தியாநமும், தியாநிக்கின்ற புருடனு,மிழந்து தியாந வஸ்து வாகிய பிரம சொரூப மாத்திர மாகச் சேடித் துள்ள நிருவி கற்ப சமாதியையடைந்து, அதுவும் லயமோ, கசாயமோ, வென மயங்கி நிலை பெயர்ந்து விடாமற், றிர மாக நிற்கின்ற சமாதி யப்பியாசத்தால், மநது பரிபூரண பரப் பிரம சொருபத்திற், பாலிற் கலந்த சலம் போ லகண்டைக ரச மாகக் கலந்து விசிராந்தி யடையிற், சூட்சும மாகச் சாந்தி யடைந் துள்ள அம் மநோ விருத்தியில், நிருவிகற்ப பரமாநந்த மாவிற்பவிக்கப்பட் டநுபவிக்கக் கூடு மென்க.

திரி புடி விகற்பம் பதி னுன்கு வித மாம்–இவைகளை யறிய விரும்பில், விசார சாகரம்–5-வது தரங்கத்தினும், விசார சந்திரோதயம் – 5-வது கலையினும் – (வேதாந்த) பதார்த்த மஞ்ஜுஷா–14-வது பதார்த்த வருணனையினும், பால போதம் 6-வது உபதேசத்திலுங் காண்க.

திரி புடி யென்பது–மூன்று மோர் காலத்துச் சேர்ந் திருப்பனவாயும், மூன்றி லொன் றில்லாத காலத்து மற்

றிரண்டு மில்லாதன வாயு முள்ளன வெவையோ, அவை கட்குத் திரி புடி யென்று பெயர்-ஞாதிரு ஞானம் ஞேய மாகிய மூன்று மோர் காலத்துச் சேர்ந்திருப்பனவாயும், மூன்றி லொன் றில்லாத காலத்து மற் றிரண்டு மில்லாதன வாயு மிருப்பதை யுய்த் துணர்க. 87

சிறந்திருக்கு மாந்மாவுஞ் செகமெல்லா நிறைந்திருந்து
மறைந்தெனக்குத் தோன்றாத வகையேது சொல்லு
[மென. 88

(இ—ள்) சிறந் திருக்கு மாந்மாவும்-(திரி புடி ரகித மாய்ச்) சிறப் புற்றிராநின்ற பரமாத்மாவும், செக மெல் லாம்-பிரபஞ்ச மெல்லாவற்றினும், நிறைந் திருந்தும்-நிறைவுற் றிருந்தும், எனக்கு-அடியேனுக்கு, மறைந்து-மறை வு ற் று, தோன்றாத-விளங்காதிருக்கின்ற, வகை யேது-விதம் யாதினால், சொல்லு மென-அதனைக் கூறி யருள வேண்டு மென் றருச்சுனன் கேட்க, (எ—று).

உம்மை யிரண்டனுள், முன்னையது உ ய ர் வு சிறப்பு-பின்னையது-ஆக்கம்.
88

சத்துச்சித் தாநந்தந் தான்மூன் று மதனுடனே,
யொத்துற்று நாம வுருவஞ் சகமாகி. 89

(இ—ள்) சத்துச் சித்தாநந்த மூன்றும்-அஸ்தி பாதிப் பிரிய மென்னு மூன் றிலக்கணங்களும் (பொருந்திய), அதனுடனே-அப் பிரமத்துடனே, நாம வுருவம்-நாம ரூப மாகிய விரண்டும், ஒத் துற்று-சேர்ந்து-சக மாகி-பிரபஞ்ச மாகி, (எ—று). தான்-அசை.
89



இருக்கையினிற் றோன்றா திவைமூன்றும் பிரமமென,
மரிக்கில்வரும் பின்னிரண்டு மரிசகமென் றுரைத்தவ
[ரோ. 90

(இ—ள்) இரு க் கை யினில்-இருக்கின்றபடியால், தோன்றாது-(ஆ த் ம ா) விளங்கமாட்டாது, இவை மூன்றும் (சச்சிதாநந்த மாகிய) இவைகள் மூன்றும், பிரம மென-பிரம விலக்கண மெனவும், பின் னிரண்டும்-பிற் கூறிய நாம ரூப மாகிய யிரண்டும், மரி சக மென்று-கெட்டுப் போகாநின்ற பிரபஞ்ச விலக்கண மெனவும், மரிக்கில்-சிந்திக்கில், வரும்-(உனக்கு ஆந்மா விளங்கும் படி) வரும்-என் றுரைத்தவரோ-என்று கூறியருளியவரோ நீர், (எ—று),
90

அறிந்துகொள்ஞா னத்தாலே யாந்மாவை யென்றுரைத்
[தீர்,
சிறந்தொளிரு மாந்மாவுந் திரிசியமா மோவெனவே.

(இ—ள்) ஆந்மாவை-ஆத்ம சொருபத்தை, ஞானத் தாலே-(தத்துவ) ஞானத்தால், அறிந்து கொள் ளென் றுரைத்தீர்-அறிந்து கொள்வா யாக வென்று கூறி யருளி னீர், சிறந்து-(சச்சிதாநந்த மய மாகச்) சிறப் புற்று, ஒளிரு மாந்மாவும்-பிரகாசிக்கப்பட்ட ஆ த் ம ா வு ம், திரிசிய மாமோ வெனவே-(பிரபஞ்சத்தைப் போல) விஷய மாகு மோ வென் றருச்சுனன் கேட்க, (எ—று)

ஆந்மாவு மென்ற எச்ச வும்மையால், பிரபஞ்சத்தைப் போ லென விரிக்கப்பட்டது, இதனை-உயர்வு-சிறப் பாக ஆக்கினும் அமையும். 91

முந்தியஞா நத்தாலே முதிருமஞ்ஞா நந்துரக்கில்,
சிந்தையிலாங் மாச்சுயமாய்த் திகழுமென்று சொன்ன
[வரோ. 92

(இ—ள்) முந்திய ஞாநத்தாலே-முதன்மையா யுள்ள தத்துவ ஞாநத்தால், முதிரும்-அதிகரித் துள்ள, அஞ்ஞாநந் துரக்கில்-அஞ்ஞாநத்தை நிவிர்த்திக்கில், சிந்தையில்-சித்தத் தின்கண், ஆங்மா - ஆத்மா வானது, சுய மாய்த் திகழு மென்று-தன்மய மாக விளங்கு மென்று, சொன்னவரோ-கூறி யருளியவரோ நீர். (எ—று) 92

இனியமுத்திச் சுகமிருப்ப தெப்படியென் றேவினவ,
வநுபவத்தி லறிவிடயா நந்தம்போ லென்றவரோ. 93

(இ—ள்) இனிய முத்திச் சுக மிருப்பது-இனிமையா யுள்ள மோக்ஷ சுக மிருக்கின்றது, எப்படி யென்றே வினவ-எது போல வென் றருச்சுநன் கேட்க, விடயாநந் தம் போல்-விஷய சுகத்தை (யநுபவித் தறிவது) போல. அநுபவத்தி லறி -(மோக்ஷ சுகத்தையும்) உனது சுவா நுப வத்தி லறிந்து கொள்வா யாக, என்றவரோ - என் று கூறி யருளிபவரோ நீர். (எ—று)

சருக்கரையின் சுவை யா தெனுங் கடாவிற்குத் தித்திப் பென விடை கூறுங் காலையிற், தித்திப் பெங்ஙன மிருக்கு மென வினவியவர்கட்கு, அநுபவித் தறிவா யெனலே யன்றி, வாக்கினு லிங்ஙன மிருக்கு மென் றுரைத் தற்குக் கூடாதது போல, மோக்ஷ சுகமு மநுபவித் தறியக் கூடியதே யன்றி, வாக்கினு லிங்ஙன மிருக்கு மென் றுவமித் துரைத்தற்குக் கூடாத தென்பது தோன்ற, 'அநு பவத்தி லறி விடயாநந்தம் போ' லென்ருர். 93



மநலயம்வந் தவரலது மற்றிலரோ முத்தரெனச்,
சநகனைப்போற் சீவந்முத்தர் தாமுமுள ரென்றவரோ.

(இ—ள்) மந லயம் வந்தவ ரலது - மநோ நாசம் வந் தவர்களே முத்தர்க ளல்லாமல், மற் றிலரோ முத்த ரென-(மநோ நாச மின்றிய) மற்றையர்கள் சீவந் முத்தர்க ளல்ல ரோ வென் றருச்சுநன் கேட்க, சநகனைப் போல்- (விவகார திசையி லிராநின்ற) சநக ராசனைப் போல, சீவந் முத்தர் தாமும்-(மநோ லய மின்றிய பிரம வித்துக்க ளாகிய) சீவந் முத்தர்களும், உள ரென்றவரோ - இருக்கிருர்க ளென்று கூறி யருளியவரோ நீர். (எ—று) தாம்-சாரியை. 94

சீவந்முத்தி யடைந்தோர்கள் செயலுமவர் தங்குணமு,
நாவுரைக்கும் வாசகமு நானறியச் சொல்லுமென. 95

(இ—ள்) சீவந் முத்தி யடைந்தோர்கள்-சீவத்துவம் விடுபட்டிராநின்ற முத்தியை யடைந்தவர்களினது, செய லும் - ஒழுக்கமும், அவர் தம் குணமும் - அவர்களினது குணங்களும், நா வுரைக்கும் வாசகமும்-அவர்கள் நாவினுல் வசநிக்கும் வசநங்களும், நா னறியச் சொல்லு மென - அடியே னறியும்படி யாகக் கூறி யருள வேண்டு மென் றருச்சுநன் கேட்க. (எ—று) 95

வருங்கருவு பிறப்பினேடு வளர்தல்பருத் தல்குறைத,
லொருங்கலுமெய்க் கென்றதனை யொறுத்திருப்பா
[ரென்றவரோ. 96

(இ—ள்) வருங் கருவு-(கன்மத்துக்குத் தக்க தாக) வராநின்ற கருப்ப மாதலும், பிறப்பினேடு (பூமியிற்) பிறத்தலோடு, வளர்தல்-வளர்தலும், பருத்தல்-பரும னுத

லும், குறைதல்-மெலிதலும், ஒருங்கலும்-நாச மடைதலு மாகிய சட் பாவ விகாரங்கள், மெய்க் கென்று - சரீரத் துக்கே யென் றறிந்து, அதனை - அச் சரீத்தினை, ஒறுத் திருப்பா ரென்றவரோ - அபிமானியாது வெறுப்புற் றிருப் பார்க ளென்று கூறி யருளிய வரோ நீர். (எ—று) 96

பார்ப்பதுவுங் கேட்பதுவும் பகர்வதுவுஞ் செல்வதுவு,
மேர்ப்பதுவுங் கரணதன்ம மெனப்புகல்வா ரென்ற
[வரோ. 97

(இ—ள்) பார்ப்பதுவும் - (உருவங்களைப்) பார்க்குத லும், கேட்பதுவும்-(சத்தங்களைக்) கேட்குதலும், பகர்வது வும்-வசனிக்குதலும், செல்வதுவுங்-கமநாகமநஞ் செய்குத லும், ஏர்ப்பதுவும்-வாங்குதல் கொடுத்தலும், கரண தன்ம மென-கரணங்களினது தரும மென்ப தாக, புகல்வா ரென் வரோ-வசனிப்பார்க ளென்று கூறி யருளியவரோ நீர்.

1 வாசக முரைத்தல். (எ—று)

தவிர்ந்தா ரெனவும் பாட முளது - அங்ஙன மாயின், புகல்வா ரென்றதையே பாட மாகக் கொண்டு பொருள் கூறிய தென்னை யெனின்-பழமையா யுள்ள சில பிரதிகளிற் புகல்வா ரென் றிருந்தமையினுனும் - 95-வது செய்யுளில் அருச்சுநன் பகவானை நோக்கிச் சீவந் முத்தர்கள் நாவு ரைக்கும் வாசகமும் நா னறியச் சொல்லு மென்ற கடா விற்குப், புகல்வா ரென்ற விடை பொருத்தமா யமைதலினு னும், சாஸ்திர விரோத மின்மையினுலும், புகல்வா ரென் றதையே கொண்டு பொருள் கூறினும், தவிர்ந்தா ரென்ற தையே கொள்ளில்-அவைகளி லுள்ள அபிமாநங்க ணீங்கி



யிருப்பார்க ளெனப் பொருள்படும், அங்ஙன மாயின், அருச்சுநன் வினவிய கடாவிற்குப், பகவான் விடை கூறுது தவிர்ந்தா ரெனல் வரும். 97

பசிதாக முயிர்க்கெனவே பயந்துக்கஞ் சுகங்காமம்,
வசிகோப மதிக்கெனவே மகிழ்ந்திருப்பா ரென்றவரோ

(இ—ள்) பசி தாக முயிர்க் கெனவே-பசியும் தாக மும், பிராணனுக் கெனவும், பயந் துக்கஞ் சுகங் காமம்-பயமும் துக்கமும் சுகமும் காமமும், வசி கோபம்-குற்றம் பொருந்திய கோபமும், மதிக் கெனவே-புத்திக் கெனவும், (ஆந்மாவுக் கில்லை யெனவு மறிந்து) மகிழ்ந்திருப்பா ரென் றவரோ-(சதா) மகிழ்ச்சியோ டிருப்பார்க ளென்று கூறி யருளியவரோ நீர். (எ—று)

KOVILOOR MADALAYAM
KOVILOOR - 630 307
(NEAR) KARAIKUDI
(PHONE 21-4[illegible])

98

2 குண முரைத்தல்.

வீடுந்தா ரமுமுறவு மேவியென்று மிருந்தாலு,
நீடுந்தா மரையிலைநீர் நிகரொப்பா ரென்றவரோ. 99

(இ—ள்) வீடும்-கிரகத்தோடும், தாரமும் - மனையா ளோடும், உறவும்-சுற்றத்தாரோடும், என்றும் - சதா கால மும், மேவி யிருந்தாலும்-கூடி யிருந்தாலும், நீடும்-செழித் துள்ள, தாமரை யிலை நீர் நிக ரொப்பார் - கமல பத்திரோ தகம் போலப் (பொருந்தியும் பொருந்தா) திருப்பார்கள், என்றவரோ-என்று கூறி யருளியவரோ நீர். (எ—று) 99

3 செய லுரைத்தல்-நீடுதல்-செழித்தல்.

பற்றிடுங்கா யமுந்தானும் பன்னுளொன் றுயினும்பி,
னுற்றபுளி யம்பழமு மோடுமொப்பா ரென்றவரோ. 100

(இ—ள்) பற்றிடுங் காயமும் - (சட மாகப்) பொருந்திய சரீரமும். தானும்-(ஆத்மா வாகிய)தானும், பன் னுள்- அநேக கோடி காலம். ஒன் ருயிடினும் - ஏக மாகக் கூடியிருக்கினும், உற்ற பின்-ஞாந மடைந்த பின்னர், புளியம் பழமும் - சிந்தகக் கனியும், ஓடு மொப்பார் - அதன் ஓடும் போற் பற் றின்றி யிருப்பார்கள், என் றவரோ-என்று கூறி யருளியவரோ நீர். (எ—று)

3 செய லுரைத்தல். 100

கூறுமுல கியற்கையுடன் கூடினுமெஞ் ஞானம்வந்தோர்
சேறும்பிள்ளைப் பூச்சியும்போற் றிரிவார்கா ணென்ற
[வரோ. 101

(இ—ள்) மெய் ஞானம் வந்தோர் - உண்மை ஞாந முதய மாகிய சீவன் முத்தர்கள், கூறும் - (அசுத்தாதி யிலக்கணங்க ளுடைய தெனச்) சொல்லப்படுகின்ற, உல கியற்கையுடன் - உலக சுபாவத்தோடு, கூடினும் - பொருந்தி யிருக்கினும், சேறும் பிள்ளைப் பூச்சியும் போல்-சேற்றையு (மதிற் சஞ்சரிக்கின்ற) பிள்ளைப் பூச்சியையும் போல, திரிவார் கா ணென்றவரோ - (அசங்க மாகவே), சஞ்சரித்துக் கொண் டிருப்பார்க ளென்று கூறி யருளியவரோ நீர்.

3 செய லுரைத்தல். (எ—று)

சங்கம், கலத்தல்-அசங்கம் கலத்த லின்மை-ஆன்மாவே யசங்கமா யுள்ள தென்னும் விசார மறிய விரும்பில், எமது கருணை மத யானை யென்னும் பிரமாநந்த சாகர சொருபராகிய கோயி லூர்ச் சிதம்பர சுவாமிகள் செய் தருளிய இலக்கணுவிருத்திற் காண்க. 101



ததியூடு கடைந்தவெண்ணெய் தான்மோரிற் கிடப்பது
[போன்,
மதியோடு கூடினும்பின் மயங்கார்கா ணென்றவரோ.

(இ—ள்) ததியூடு கடைந்த வெண்ணெய் - தயிரின் கட் கடைதலா லுண்டாகிய நவநீத மானது, மோரிற் கிடப்பது போல்-மோரினிடத்துச் சம்பந்த மின்றிக் கிடத்தல் போல, பின் - (ஞாந மடைந்த) பின்னர், மதியோடு கூடினும்-புத்தியோடு சேர்ந் திருக்கினும், மயங்கார்-மயக்க மடையார்கள், கா ணென்றவரோ-நீ யறிவா யாக வென்று கூறி யருளியவரோ நீர். (எ—று) 102

அருச்சுனன் றன் பொருட்டாக வனைவருக்கும் ஞானம்
[வரப்,
பொருந்தியதே சிகவடிவாம் புண்ணியரே கண்வளரீர்.

(இ—ள்) அருச்சுநன் றன் பொருட் டாக-அருச்சுநனிமித்த மாக, அனைவருக்கும் - சகல முமூட்சுக்களுக்கும், ஞானம் வர-ஞாந முதய மாகும்படி, பொருந்திய-அமைந் தருளிய. தேசிக வடி வாம் - குரு வடிவ மாகிய, புண்ணியரே கண்வளரீர் - புண்ணிய மூர்த்தியே, நித்திரை செய் தருளும். (எ—று) 103

ஆயர்குல மாத ரளவிலோ ரைப்புணர்ந்தும்,
தூயபதி னுரு யிரவருடன் றோய்ந்திருந்தும். 104

(இ—ள்) ஆயர் குல மாதர்-யாதவ வம்ச ஸ்திரீகள், அளவிலோரைப் புணர்ந்தும் - அள வில்லாதவர்களைச் சேர்ந்தும், தூய - பரிசுத்த மாகிய, பதி னுருயிரவருடன்- பதி னுருயிர மிராச ஸ்திரீகளோடு, தோய்ந் திருந்தும்- கூடி யிருந்தும். (எ-று) 104

பரமமு னிவர்முன்னே பரிச்சித்தைத் தீண்டியன்று,
பிரமசரி யஞ்செலுத்தும் பேரொளியே கண்வளரீர்

(இ—ள்) பரம முனிவர் முன்னே - மேலான முனீஸ்வரர்கள் முன்பாக, பரிச்சித்தைத் தீண்டி-பரிச்சித் தரசனைப் பரிசித்து, அன்று-அக் காலத்தில், பிரமசரியஞ் செலுத்தும்-பிரமசரியத் தன்மையை நடாத்திய, பேரொளியே - பெருமை பொருந்திய சைதந்நியமே, கண் வளரீர்-நித்திரை செய்தருளும். (எ—று) 105

வெண்பா.

ஆதிமூ லம்விசயற் காதிமறை யின்பொருளை,
யோதியு ணர்த்தியவிவ் வுண்மையினைக் — காதலுற்றுக்,
கற்றோருங் கேட்டோருங் காசினியில் வாழ்ந்துமுத்தி,
பெற்றோர்கண் முத்தர்பெறும் பேறு. 106

(இ—ள்) ஆதி மூலம்-யாவுக்கு முதன்மை யாயுங் காரணமாயு முள்ள பகவான், விசயற்கு - அருச்சுநனுக்கு, ஆதி மறையின் பொருளை - முதன்மை யரயுள்ள வேதார்த்தத்தை, ஓதி யுணர்த்திய - உபதேச மூல மாகத் தெரிவித்துள்ள, இவ் வுண்மையினை - (எதார்த்த போதக மாகிய கிதா சார மென்னும்) இம் மெய் நூலை, காத லுற்று-பிரிய முற்று, கற்றோரும்-படித்தவர்களும், கேட்டோரும்-(குரு) முக மாகச் சிரவணஞ் செய்தவர்களும்,காசினியில் வாழ்ந்து-உலகத்திற் சுக வாழ்வை யுற்று, முத்தர் பெறும் பேறு-சீவந் முத்தர்க ளடையும் பிரயோசந மாகிய, முத்தி-(விதேக கைவல்லிய மென்னு)மோக்ஷத்தை, பெற்றோர்கள்-அடைந்தவர்களே யாம். (எ—று) 106

கிதா சாரத் தாலாட்டு உரை முற்றிற்று.



# கோவிலூர்
# சிதம்பர தேசிகர் பதிகம்.

இது.

பிரமாநந்த சாகர சொருப ராகிய, ஸ்ரீ கோயி லூர்ச் சிதம்பர சுவாமிகள் மாணுக்க ராயும் - திரு வாருரைச் சேர்ந்த வன்மீக புரத்தி லெழுந் தருளிய ஸ்ரீ குரு தக்ஷிணு மூர்த்தி சுவாமிக ளாதீநத்திற் குரியவ ராயு முள்ள மதுரைச் சிவாநந்த சுவாமி களா லியற்றப்பட்டது.

வெண்பா.

சீரார் கழநிச்சி தம்பரமா தேசிகன்மே,
லேரார் பதிகமி யம்புதற்கு — நேர்துணையாம்,
வஞ்சக்க யமுகனை மாறுபட வென்றவைந்து,
கஞ்சக்க ரக்கற்ப கம்.

எழு சீர்க் கழி நெடி லாசிரியம்.

நீரின்மே லெழுது மெழுத்தினுக் கிடமை நேர்மையாய் வடிக்குநர் போலப், பாரின்மே லழியு முடம்பினை வளர்க்கப் பலபொருட் டேடிநொந் தலையுங், காரிருணிகர்த்த மநத்தினே னெற்குக் கதிதர லெந்நா ளுரையாய், சீரருட் கடலே கழநியம் பதிவாழ் சிதம்பர தேசிகோத் தமனே. 1

உய்யநூ லுரைக்குஞ் சாதந வகையி லொன்றையு மடைந்திலேன் மடவார், மையன்மேற் கொள்ளு நெஞ்சினே னிச்சை மாய்த்தநின் னடியர்போற் பேசும், பொய்யனேன் றனையுங் கைவிடேல் விடினுன் புகழினுக் கழகின் றுங் கருணை, செய்யவே வேண்டுங் கழநியம் பதிவாழ் சிதம்பர தேசிகோத் தமனே. 2

தந்தைதாய் புதல்வர் தம்பிழை நோக்கித் தணந்திடல் வழக்கன்று மதுபோ, லெந்தைநீ யெனது பெரும்பிழை நோக்கி யிகழ்ந்துகை விட்டிடேல் விடின்மு, னிந்தையில் கருணு நிதியென நின்னை நிகழ்த்திய மறைகள்பொய்த் திரு மால். சிந்தனைக் கரியாய் கழநியம் பதிவாழ் சிதம்பர தேசி கோத் தமனே. 3

கனிகையை மணந்து பினமவட் கின்பங் கலவியிற் றந்திடார் போல, வெனைசின தடியர் குழுவிடை யொருவ னெனமுனஞ் சேர்த்தனை பின்னர், தனையெனக் கருளி யழி வுறு வின்பந் தந்திலை யென்செய்வே னந்தோ, தினையள வெனினு மீய்ந்தருள் கழநிச் சிதம்பர தேசிகோத் தமனே. 4

புகழினை விரும்பித் துறவர்போ னடிக்கும் பொய் மையே னின்னன்பர் குழுவின், மகிழ்வுறச் சேர்ந்தும் நன் னடை பயிலா மடமையே னென்செய்வேன் பவமா. மக ழிடை மூழ்கி யயர்வுறு கின்றே னஞ்சலென் றெனக்கருள் புரிவாய். திகழ்மணிக் குன்றே கழநியம் பதிவாழ் சிதம்பர தேசிகோத் தமனே. 5

மடமையா லுழலும் புன்மையே னெனையும் வாழ் விப்ப துன்பர மன்றே, படமதிற் றோன்று மோவிய வினங்கள் படத்தினுக் கிதரமில் லதுபோற், சடமதா முடல முதற்பிர பஞ்சந் தனக்குவே றிலையென வாய்ந்து, திடமுறத் தெளிந்த துறவர்வாழ் கழநிச் சிதம்பர தேசிகோத் தமனே. 6

பத்தர்கட் கருளும் பேரருட் பிழம்பே பாவியேன் மநத்துறு மகந்தைப், பித்தறக் கருணை செய்திடி னின்மேற் பிழைசொல்வா ருலகிலுண் டென்றே, வித்தலத் துனையே கதியென விரும்பு மெனக்கருள் செய்திலை ஞாந, சித்தர்கள் பரவுங் கழநியம் பதிவாழ் சிதம்பர தேசிகோத் தமனே. 7



இடம்பொரு ளேவ லெனும்பெருஞ் சுமையை யெடுத்தலே சுகமெனக் கருதி, மடம்புகுந் துழலச் செயு மட மதனை மாய்த்துமெய்ச் சிவமதே யிடமா, யிடரறக் கொண்டு பின்னமற் றுளிர வெந்தைநீ யருள்செய்வாய் செய்வாய், திடமநத் தடியர் பரவவாழ் கழநிச் சிதம்பர தேசிகோத் தமனே. 8

சுத்திகா ரசிதங் கானனீர்க் கயிற்றிற் றோன்றர வெனத் திக மூலகைச், சத்திய மெனயான் மடமையாற் கருதித் தளர்வுறு வண்ணநீ யருள்வாய், அத்தனே யரசே யன்னையே யமுதே யப்பனே யொப்பிலா மணியே, சித்தனே செல்வக் கழநியம் பதிவாழ் சிதம்பர தேசிகோத் தமனே 9

பருதியை யடைந்தும் பனிக்குளிர் நீங்காப் பான்மை போற் சுகவடி வெனவே, சுருதிசொல் நின்னை யடைந்து மியா னென்னே துயரது நீங்கிலே னந்தோ, கருதிய தளிக் குங் கற்பக ராஜ கட்கரேன் னிறையொடு மமர்ந்த, திரு நெலை யுமையாள் காப்புறுங் கழநிச் சிதம்பர தேசிகோத் தமனே. 10

முற்றிற்று.

---

## சிதம்பர தேசிகர் தோத்திரம்.

எத்தனையோ சநநமெடுத் தந்தோ வந்தோ வேழை யேன் படுந்துயருக் கிலக்கு முண்டோ, வத்தனையுந் தெரிந் திருந்து மிரங்கு கில்லா யாகிலினி யெனக்கருள்வா ராரோ கிட்டாப், புத்தமுதே யருட்பிழம்பே கருணை வாழ்வே பூரணு நந்தமயப் பொலிவே ஞாந, சித்தரெலாம் பரவ வளர் கழநி வாழுஞ் சிதம்பரதே சிகப்பிரம தேவ தேவே. 1

அய்யநின் னடியர்தமி லொருவன்யானு மளவில்பவப் பிணிப்பசியா லந்தோ வந்தோ, நையமற்றை யடியரெலாம்

பிரமா நந்த நறுமமிர் துண் டகங்களித்து வாழ்த லென்னே,
மையல்செயும் வினைப்பயனு மெனிலோ நின்னை வல்லகரு
ணுசிதியென் றுரைத்த லென்னே, செய்யமறை முழங்கு
திருக் கழசி வாழுஞ் சிதம்பரதேசிகப்பிரம தேவ தேவே. 2

பித்தர்செயும் பிழைநோக்கார் பெரியோ ராங்கு பேத
மையா ணவப்பேய்தான் குடியாய்க் கொண்ட, மத்தமதி
யினன்யான்செய் பிழைநீ நோக்கல் வழக்கன்றே மருந்தி
னியல் பருந்து வோர்க, ளெத்தகைய ரெனினுமவர்
பிணியை நீக்க லெனவெனது பவத்தையுநீ தவிர்க்கா
தென்னே, சித்தியெலாம் விளங்குதிருக் கழசி வாழுஞ்
சிதம்பரதே சிகப்பிரம தேவ தேவே. 3

KOVILOOR MADALAYAM
KOVILOOR - 630307
(NEAR) KARAIKUDI
(PHONE: 486846)

## நெஞ்சிற் கறிவுறுத்தல்.

பித்தனைத் துந்தவிர்த் தாள்பவ னென்னப் பெருமறைக
ளெத்தனை நன்மொழி கூறினுங் கேட்டிலை யேழைநெஞ்சே
கத்தனை மோக விருட்குமெய்ஞ் ஞானக் கதிரனெவன்
சித்தனை நந்தஞ் சிதம்பர தேசிக தேவனையே. 1

வீணிலை நந்தஞ் சிதம்பர தேவனை வேண்டலென்று
காணிலை கண்டுக ளித்திலை யன்னேன் கழல்சிரத்திற்
பூணிலை பூண்டவர் போனடிக் கின்றனை பொய்ம்மை
[நெஞ்சே
நாணிலை யென்செய்வை யந்தோ மரணம்ந ணுகிடினே. 2

மரணத் தொடுபவ மற்றூர்க ளென்னு மறைமொழியைத்
திரணத் தளவெனி னுமதித் தாயிலை தீமைநெஞ்சே
கரணத் தினந்தஞ் சிதம்பர தேவன் கமலமென்பூஞ்
சரணத்தை யன்பொடு தாங்கிப்பு கழ்ந்திடுஞ் சாந்தர்களே.

சற் குரு துணே.

ஆகக் கவி 16.

7504
R65(KOV)

உ சிவ மயம்.

இராம நாத புரம் ஜில்லா, திருப் பூ வணம், வேதாந்த மடம்,

ஸ்ரீ காசிகாநந்த ஞானாச்சார்ய ஸ்வாமிகள் இயற்றியன. அச்சிட்டன.

காசிகாநந்த நூற் கொத்து. பெட்டி 1க்கு வால்யும் 41.

| நெ. | புத்தகப் பெயர் | ரூ. | பைசா |
|---|---|---|---|
| 1 | வேதாந்த சாஸ்த்திர ரத்நாவலி 9 சேர்ந்தது கவி 1132. | 3 | 00 |
| 2 | தோத் திரயம், பகவற் கீதை கவி 545, ஈசுவர கீதை கவி 338, பிரம்ம கீதை கவி 547 மூன்று சேர்ந்தது கவி 1430. | 3 | 00 |
| 3 | வேதாந்த சாஸ்திர ரத்நத் திரயம், விவேக சூடாமணி கவி 671, அஞ்ஞ வதைப் பரணி கவி 494, பஞ்ச தசி கவி 796, மூன்று சேர்ந்தது கவி 1961. | 3 | 00 |
| 4 | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா, வசநம், ஹிந்தி மொழி பெயர்ப்பு. | 2 | 50 |
| 5 | விசார சாகரம், வசநம், ஹிந்தி மொழி பெயர்ப்பு. | 2 | 25 |
| 6 | கதா சரித் சாகரம், கதை, சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 2 | 25 |
| 7 | நாநா ஜீவ வாதக் கட்டளை, சத்தியார்த்தப் பிரகாசிகை உரை. | 2 | 00 |
| 8 | கீதா சாரத் தாலாட்டு, லகு சந்திரிகை உரை. | 2 | 00 |
| 9 | ஷை நக்ஷத்திர விளக்க உரை. 0—25. 10. சசிவந்ந போதம், பதார்த்த பாஸ்கரன் உரை | 2 | 00 |
| 11 | மகா ராஜத் துறவு, மகப் பிரசாதினி உரை. | 2 | 00 |
| 12 | பக்தி (வைராக்ய) சதக, பத உரை, பொழிப் புரை. | 1 | 50 |
| 13 | மேற்படி உரை உதாரணக் கவி 103க்கு பக்தி ரச உரை. | 1 | 00 |
| 14 | கைவல்ய நவநீதம், உரை உதாரணக் கவி 233க்கு ஆதித்தன் உரை. | 2 | 50 |
| 15 | ஹரி மீடே—ஹரி தத்வ முக்தாவலி, பத உரை, வசநம். | 0 | 75 |
| 16 | சிடாசாரம், பால போதினி உரை. 0-50 17. வைராக்கிய தீபம், பத உரை பொழிப்புரை. | 0 | 50 |

| | | | |
|---|---|---|---|
| 18 | மேற்படி உரை உதாரணக் கவி 73க்கு சுடர் உரை. | 1 | 00 |
| 19 | திருக் களர், வீர சேகர ஞான தேசிக சரிதம், வசநம். | 1 | 00 |
| 20 | வியாச தாத்பரிய நிர்ணயம் வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0 | 50 |
| 21 | நைஷ்க் கர்மிய சித்தி வசநம், சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0 | 50 |
| 22 | வேதாந்த சித்தாந்த முக்தாவலி வசநம், சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0 | 50 |
| 23 | ஸ்வராஜ்ய சித்தி வசநம், சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0 | 50 |
| 24 | பகவற்கீதை 15-வது அத்தியாயம் பத உரை, தமிழ்க் கவி உரை மூர்க்க சதகம் பதஉரை. | 0 | 50 |
| 25 | ஒன்பது துறவியர் பாடிய அருட் பா மாலை கவி 288. | 1 | 00 |
| 26 | வேதாந்த பரிபாஷை வசநம், சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0 | 44 |
| 27 | மண்டல பிராஹ்மண உபநிஷத், ராஜ யோக பாஷ்யம், சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0 | 25 |
| 28 | ஈசாவாஸ்ய உபநிஷத் சங்கர பாஷ்யம், சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0 | 25 |
| 29 | வேதாந்த சஞ்ஞா வசநம், சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0 | 13 |
| 30 | வாசிட்டம் கவி 2055 2—25. 31. சூட்டுக் கோல், கட்டாரி, புச்சம், கண்டநம். | 1 | 00 |
| 32 | சார்த சதக ஸ்தோத்ர ரச மஞ்சரி, பரிமள தீப உரை | 1 | 50 |
| 33 | திரு எம் பாவை, திருப் பள்ளி எழுச்சி, மணி மாலை—சிறு சுடர் உரை. | 0 | 75 |
| 34 | திரிம் சத் ஸ்தோத்ர ரச மஞ்சரி, நந்தா ஒளி உரை. | 0 | 25 |
| 35 | மந்திர உபதேசம், வசநம். 0—25. 36. சாது சங்க நிறுவல் விழா வைபவம் வசநம். | 0 | 50 |
| 37 | சப்ததா சப்ததி: விம்சதி: ஸ்தோத்திர ரச மஞ்சரி. நந்தா ஒளி உரை. | 0 | 75 |
| 38 | வட நாட்டில் ஹரித்துவாரக் கும்ப மேளாவும், தென்னாட்டில் சாதுக்கள் மேளாவும். | 0 | 50 |
| 39 | மடங்களின் உத்பத்தியும், தற்போ துள்ள நிலைமையும், வசநம். | 0 | 13 |
| 40 | அதிஷ்டாநத்தி விருப்பவர்கட்கும், அத்வைதிகட்கும் ஓர் அறிக்கை. | 0 | 25 |
| | புத்தகம் 85 (40+45) | 45 | 20 |
| 41 | காசிகாநந்த விஜயம் வசநம். 0—25. 42. மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி கவி 62. | 0 | 50 |
| | (42+46) 88 | 45 | 95 |